# ஸ்ரீ வேங்கடேஶ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூசைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

### சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய் கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | முதல் | 3-30 | வரை | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 6-00 | ,, | விஸ்வரூப சர்வதரிசனம் |
| 6-00 | ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவைகள் |
| 6-15 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 1-00 | மதியம் | ஸர்வ தரிசனம் |
| 1-00 | ,, | 2-00 | ,, | சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம், இரவு மணி |
| 9-00 | ,, | 11-00 | ,, | சுத்தி முதலிவைகள் |
| 11-00 | ,, | 11-30 | ,, | ஏகந்த சேவை (ஆர்ஜிதம்) |

### புதன் கிழமைகளில் (சஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 6-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 6-00 | ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவை |
| 6-15 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 10-00 | ,, | ஸஹஸ்ர கலசாபிஷேகத்திற்கு ஏற்பாடுகள் |
| 10-00 | ,, | 1-00 | மதியம் | ஸஹஸ்ர கலசாபிஷேகம் |
| 1-00 | ,, | 2-00 | ,, | சுத்தி இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 2-00 | ,, | 8-00 | இரவு | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம், இரவு மணி முதலியவைகள் |
| 9-00 | ,, | 11-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-00 | ,, | 11-30 | ,, | சுத்தி முதலியவைகள் |
| | | 11-30 | | ஏகாந்தசேவை (ஆர்ஜிதம்) |

### வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 6-00 | ,, | விஸ்வரூப தரிசனம் |
| 6-00 | ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவை |
| 6-15 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 11-00 | ,, | சாலிம்பு, சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடா அலங்காரம், மணி, திருப்பாவாடா கிரஹஸ்தர்களுக்கு பஹுமானம் முதலியவை |
| 11-00 | ,, | 7-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 7-00 | ,, | 7-30 | இரவு | சுத்தி முதலியவை |
| 7-30 | ,, | 9-00 | ,, | பூலங்கி சமர்ப்பணம் இரவு கைங்கர்யம், இரவு மணி |
| 9-00 | ,, | 11-30 | ,, | பூலங்கி (ஆர்ஜிதம்) |
| 11-30 | ,, | 11-45 | ,, | சுத்தி முதலியவை |
| | | 11-45 | | ஏகாந்தசேவை (ஆர்ஜிதம்) |

### வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 5-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 5-00 | ,, | 7-00 | ,, | சாலிம்பும், நித்ய கட்டளையும், கைங்கர்யங்களும் (ஏகாந்தம்) |
| 7-00 | ,, | 9-00 | ,, | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 9-00 | ,, | 11-00 | ,, | அபிஷேகானந்தார தரிசனம் (ஆர்ஜிதம்) |
| 11-00 | ,, | 12-30 | மதியம் | சமர்ப்பணம் |
| 12-30 | ,, | 2-00 | மாலை | தோமால சேவை அர்ச்சனை (தனி) மணி, பலி, சாத்துமுறை |
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யங்கள் இரவு மணி |
| 9-00 | ,, | 11-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-00 | ,, | 11-30 | ,, | சுத்தி முதலியவை |
| | | 11-30 | | ஏகாந்தசேவை (ஆர்ஜிதம்) |

குறிப்பு : விழா நாட்களின்போதும், சிறப்பு நிகழ்ச்சிகளின் போதும் மேற்கூறிய நிகழ்ச்சி நிரல்கள் தேவையின் பொருட்டு மாற்றப்படும்.



கொலிசிதே ரக்ஷிஞ்சே கோவிந்திதடு
இலகு லக்ஷ்மிகி மகிட கோவிந்திதடு (பல்லவி)

கோவர்த்தனம் எத்தினட்டி கோவிந்திதடு
வேவேலு கொல்லெதல கோவிந்திதடு
கோவிதுடை ஆலகாச்சே கோவிந்திதடு
ஆவல கம்ஸு சம்ப்பின ஆ கோவிந்திதடு (கொலி)

குரூர காளிங்க மர்த்தன கோவிந்திதடு
வீர சக்ராயுதபு கோவிந்திதடு
கோரி சமுத்ராலு தாட்டே கோவிந்திதடு
ஆர்தி பாலுர தெச்சே யா கோவிந்திதடு (கொலி)

குந்தனபு கால தோடி கோவிந்திதடு
விந்துல ரேபல்லி கோவிந்திதடு
பொந்தி ஸ்ரீ வேங்கடாத்ரிபை பொஸக திருப்பதிலோ
அந்தமை பவளிஞ்சின ஆ கோவிந்திதடு (கொலி)

*அன்னமாச்சார்யா சங்கீர்த்தனைகள்: X அத்யாத்ம சங்கீர்த்தனை—108.*



*[நம்பிக்கையுடன் சரணடையும் பக்தர்களைக் காப்பவன் இக் கோவிந்தன்: மண் மகளும், திருமகளும் உரிமை கொண்டாடும் தலைவனும் இக்கோவிந்தன்·*

*அன்று ஆயர் குலத்தையும் ஆவினத்தையும் காக்கக் குன்றினைக் குடையாகப் பிடித்தவன்; ஆயிரக்கணக்கான இடையர்களின் தலைவன்; ஆவினத்தைச் சிறப்புடன் காக்கும் காவலன்; கம்சனென்னும் அரக்கனைக் கொன்றொழித்தவன்.*

*விடம் கொண்ட காளிங்கனை அடக்கி ஆனந்த நடனமாடினவன்; வீரம் மிக்க சக்கரப்படையினை கைக்கொண்டவன்; உதவி செய்ய கடக்க முடியா கடல்களைத் தாண்டினவன்; அவ்வாறு கடந்து தன் குருவின் பிள்ளைகளைக் காத்தவன்.*

*பட்டுப் பிதாம்பரத்தை ஆடையாகத் தரித்தவன், ரேபல்லி வாழ் கோபியர்களுக்கு மிக விருப்பமுள்ளவன், அத்திருமலைமேல் நின்றவண்ணம் அருள் புரிந்து திருப்பதியில் அழகுக் கோலத்தில் பள்ளிகொண்ட கோவிந்தனிவன்:]*






# ஸப்தகிரி

மலர்: 8 மே 1978 இதழ் 12

தனிப்பிரதி 50 காசு
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:
திரு. பி. எஸ். ராஜகோபாலராஜு,
ஐ. ஏ. எஸ்.,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer,
Publication Section,
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.

## உள்ளுறை



அட்டைப்படம்: கருட வாகனத்தில் ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி-திருப்பதி.

சில தவிர்க்க முடியாத காரணங்கள் முன்னிட்டு, 'முக்கவி கண்ட காப்பியம்' தொடர் கட்டுரையினை இம்மாத இதழில் வெளியிட முடியவில்லை—ஆசிரியர்.



கொலிசிதே ரக்ஷிஞ்சே கோவிந்திதடு
இலகு லக்ஷ்மிகி மகிட கோவிந்திதடு (பல்லவி)

கோவர்த்தனம் எத்தினட்டி கோவிந்திதடு
வேவேலு கொல்லெதல கோவிந்திதடு
கோவிதுடை ஆலகாச்சே கோவிந்திதடு
ஆவல கம்ஸு சம்ப்பின ஆ கோவிந்திதடு (கொலி)

குரூர காளிங்க மர்த்தன கோவிந்திதடு
வீர சக்ராயுதபு கோவிந்திதடு
கோரி சமுத்ராலு தாட்டே கோவிந்திதடு
ஆரீதி பாலுர தெச்சே யா கோவிந்திதடு (கொலி)

குந்தனபு காஸ தோடி கோவிந்திதடு
விந்துல ரேபல்லி கோவிந்திதடு
பொந்தி ஸ்ரீ வேங்கடாத்ரிபை பொஸக திருப்பதிலோ
அந்தமை பவளிஞ்சின ஆ கோவிந்திதடு (கொலி)

*அன்னமாச்சார்யா சங்கீர்த்தனைகள்: X அத்யாத்ம சங்கீர்த்தனை–108.*



*[நம்பிக்கையுடன் சரணடையும் பக்தர்களைக் காப்பவன் இக் கோவிந்தன்: மண் மகளும், திருமகளும் உரிமை கொண்டாடும் தலைவனும் இக்கோவிந்தன்·*

*அன்று ஆயர் குலத்தையும் ஆவினத்தையும் காக்கக் குன்றினைக் குடையாகப் பிடித்தவன்; ஆயிரக்கணக்கான இடையர்களின் தலைவன்; ஆவினத்தைச் சிறப்புடன் காக்கும் காவலன்; கம்சனென்னும் அரக்கனைக் கொன்றொழித்தவன்.*

*விடம் கொண்ட காளிங்கனை அடக்கி ஆனந்த நடனமாடினவன்; வீரம் மிக்க சக்கரப்படையினை கைக்கொண்டவன்; உதவி செய்ய கடக்க முடியா கடல்களைத் தாண்டினவன்; அவ்வாறு கடந்து தன் குருவின் பிள்ளைகளைக் காத்தவன்.*

*பட்டுப் பிதாம்பரத்தை ஆடையாகத் தரித்தவன், ரேபல்லி வாழ் கோபியர்களுக்கு மிக விருப்பமுள்ளவன், அத்திருமலைமேல் நின்றவண்ணம் அருள் புரிந்து திருப்பதியில் அழகுக் கோலத்தில் பள்ளிகொண்ட கோவிந்தனிவன்:]*




# ஸப்தகிரி



மலர்: 8 மே 1978 இதழ் 12

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:
திரு. பி. எஸ். ராஜகோபாலராஜு,
ஐ. ஏ. எஸ்.,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,

Marketing Officer.
Publication Section,
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.

## உள்ளுறை



அட்டைப்படம்: கருட வாகனத்தில் ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி-திருப்பதி.

சில தவிர்க்க முடியாத காரணங்கள் முன்னிட்டு, 'முக்கவி கண்ட காப்பியம்' தொடர் கட்டுரையினை இம்மாத இதழில் வெளியிட முடியவில்லை—ஆசிரியர்.

# ஆசிரியர் உரை

ஆதியும் அந்தமுமில்லாத் தனிப் பெருங்கருணையாளன்; பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிவுடையவன்; கருப்பைக்குள் முட்டைக்கும், கல்லினுள் தேரைக்கும் விருப்பமுற்று அமுதளிக்கும் மெய்யன்; இத்தகு பெருமைமிகு அப்பரம்பொருள் தன்னை நாடுவோரினும் பாடுவோர்பால் விருப்புற்று விரைந்து வந்து அருளுவது உறுதி. ''பண்ணொன்ற இசைபாடும் அடியார்கள் குடியாக, மண்ணின்றி விண் கொடுக்கும்...........'' என்றவாறு தன்னை இனிய இசையுடன் சொல்மாலையால் சூடுவார்க்கு இம்மை மறுமை உலக இன்பங்களை அள்ளித் தந்திடுவான் என்பதற்கு இறையடியார்கள் பலருடைய வரலாறே சாட்சி.

கீர்த்தனை என்பது இறைவனின் திருநாமத்தை, அவனுடைய அருமை பெருமைகளை, சிந்தனையோடும் நம்பிக் கையோடும் தெய்வ உணர்ச்சிக்குமறலோடும் பண்ணுடன் பாடப்படுவது. பாகவதம் கூறிய ஒன்பது வகைப் பக்தி வழிகளில் இக்கீர்த்தனை முறையும் ஒன்று. நாரதர், வால்மீகி, சுகர் முதலிய முற்கால பக்தர்களும், கௌரங்கா, நானக், துளஸி தாஸ், சூர்தாஸ் முதலிய பிற்கால பக்தர்களும் தாங்கள் புனைந்த கீர்த்தனைகளைக் கொண்டுதான் இறைவனை அறிந்து தெளிந்தார்கள். அத்தகைய பக்தி உணர்வுக்குச் சாதாரண மனிதனும் அடிமையாகும் வகையில், அவ்வுணவூர்க்கு ஒரு வடிவமும் நுணுக்கமும் தந்து, அடுத்த விநாடியில் வாழ்வாரோ வீழ்வாரோ என ஐயுறத்தக்க மனிதனைப் பொருள் கருதி பாடாது, அருள் கருதி, எல்லாம் அறிந்து, எங்கும் நிறைந்து, என்றும் உள்ள அப்பரமனைப் பாடி, பரகதிக்குப் பாதை வகுத்து, பாகவதடியார்களிடையே பட்டொளி வீசிடும் வகையில இசை வானிலும், தெலுங்கு இலக்கிய வானிலும் பவனி வருபவர் கி.பி. 15 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த தெலுங்கு இலக்கிய நாயகர்களில் ஒருவரும், வேங்கடவனின் மேல் தீராக் காதல் கொண்டு ஊற்றெனச் சுமார் 32,000 கீர்த்தனைகளை வழங்கியவருமான ஸ்ரீ அன்னமாச்சார்யா அவர்கள். வாழ்த்த வாயும், நினைக்க மடநெஞ்சும், தாழ்த்த சென்னியும் தந்த அப்பரம்பொருளை சாமானியனும் மனமொழி மெய் களால் சிந்தித்து வந்தித்து, பக்தி உணர்ச்சியில் திளைத்துப் பரமனின் பரந்த உள்ளத்தை பாமரனும் எண்ணி உயர்கதி அடையும் வகையில் அன்னமாச்சார்யா தன்னுடைய கீர்த்தனைகளைக் கற்பனைத் திறத்துடனும், எளிமையான கிராமியச் சொற்களுடனும் பக்திச்சுவையும் காதற்சுவையும் இணைத்து உவந்தூட்டும் வகையில் புனைந்துள்ளார். 'பதகவிதா பிதா மஹா' என்றும், 'சங்கீர்த்தனாசார்யா' என்றும் ''ஹரி கீர்த்தனாசார்யா' என்றும் பலவாறு புகழப்படும் அன்னமய்யா வேத உபநிஷத் கருத்துக்களை, வைஷ்ணவத் தத்துவங்களை ஆழ்வார்கள் வழிநின்று, தம்பாக்களின் மூலம் எளிதாக்கினார்.

பெற்றோர்கள் காட்டிய அன்பைத் திரும்ப வழங்கும் போது, மனிதன் அதனை கடமையாக்கி விடுகின்றான். தன் பிள்ளைகளிடம் அவன் காட்டும் அன்பு காலப் போக்கில் பாசமாகி விடுகின்றது. ஆனால் தலைவன் தலைவிக்கிடையே பரிமாறப் படும் அன்போ தெய்வீக காதலாகின்றது. அவர்களுக்கிடையே நிலவும் குறைபாடுகளே அன்பின் நெருக்கத்தினால் நிறை களாக அனுபவிக்கப்படுகின்றன. ஆம் தலைவன்-தலைவி வாழ்க்கையில் தான்-அது களவாயினும், கற்பாயினும்-அன்பிற்கு அன்பு ஈடாகின்றது. இப் பால் உணர்ச்சியில் மயங்குவது மனிதனின் பலவீனமேயாயினும், அதுவே அவர்களை இணைக் கும் பலமான பாலமாகின்றது. இதனை மனதிற் கொண்டுதான் இவ்வுணர்ச்சியின் அடிப்படை ஆதிக்கத்தால்தான், இறை யடியார்கள் சிலர் தன்னை நாயகியாகவும் (ஜீவாத்மாவாகவும்) தான் வணங்கும் இறைவனை நாயகனாகவும் (பரமாத்மா வாகவும்) பாவித்து காதற் சுவை பொங்கப் பாக்கள் இயற்றித் தங்களை இறைவனிடம் மானசீகமாக இணைத்துக்கொண்டு, எதிர் கால மனிதனையும் அச்சுவையில் திளைக்கச் செய்து இறை ஈடுபாட்டினை அவனுள் தோற்றுவிக்க முயற்சியும் செய் தனர். அதில வெற்றியும் பெற்றனர். அன்னமய்யாவும் அவர்கள் வழிநின்றே தம் பாக்களில் பெரும் பகுதியினை சிருங்கார சுவையில் தோய்த்து எடுத்துள்ளார். மேலும் வைணவ சமயத்தின் அடிப்படையாக விளங்கும் சரணாகதி தத்துவத்தின் சிறப்பினை, அதன் அவசியத்தைத் தம் பாக்களில் அறிவுறுத்தியதல்லாமல், பல சீர்திருத்தக் கருத்துக் களையும் புகுத்தி, தென்னிந்தியாவின் கலாசார மரபிற்கும், சமய வாழ்விற்கும் தம் படைப்புக்களை அர்ப்பணித்து, அவற்றை காலத்தால என்றென்றும் அழியாவண்ணம் கனிந்த மொழியிலும், எளிய நடையிலும் படைத்து, நடையில் ஓர் இளமை மணம் பரப்பி, பக்தி உணர்ச்சி ஊட்டி, தம் முதிர்ந்த அனுபவத்தைப் புகட்டி ஆன்மிக, இலக்கிய, இசை, கலை, ஆகிய துறைகளில் ஒரு புதிய மறுமலர்ச்சியை ஏற்படுத்தி, புகழ்பெற்ற கீர்த்தனைகள் பல வழங்கிய ஷேத்ரய்யா, தியாகராஜர் போன்றோர்க்கு வழிகாட்டியாகவும் விளங்கச் செய்தார்.

எனவே பக்தி இலக்கியத்தில் மாபெரும் தொண்டாற்றிய இவ்வுலக மகாகவியை உலகறியச் செய்ய தி.தி. தேவஸ் தானம் சுமார் 30 ஆண்டுகளாக அவருடைய நினைவு விழாவை கொண்டாடி வருகின்றது. தற்போது அன்னாரின் பிறந்த நாள் விழாவையும் இவ்வாண்டிலிருந்து கொண்டாட உள்ளது. அன்னாரின் பெருமை, அவர் படைத்திட்டப் பக்தி பனுவல் களின் புகழ் ஆகியவற்றைப் பரப்பும் புனிதப்பணியில் ஒரு தனிப்பட்ட நிறுவனமட்டுமின்றி, இசை இலக்கிய உலகத்தைச் சார்ந்த அறிஞர்களும், கலைஞர்களும் பங்கேற்கவேண்டும். இல்லையெனின் அன்னமாச்சார்யாரின் அருங்கீர்த்தனைகள் யாவும் காணக்கிடைக்காப் புதையலாகவே இருந்து விடும்.

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

**15-3-78 அன்று திருமலையில் கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:**

திருப்பதி ஸ்ரீ பத்மாவதி மகளிர் கல்லூரி அருகே கட்டப்பட்டு வரும் வி. ஐ. பி. விருந்தினர் விடுதிக்கான மரச் சாமான்கள், திரைச் சீலைகள் ஆகியவற்றை வாங்குவதற்காக குழு ரூ. 1,14,000 ஒதுக்க முடிவு செய்துள்ளது.

திருப்பதி ஸ்ரீ பத்மாவதி மகளிர் கல்லூரியில் உள்ள புதிய கட்டடத்தின் மேல், வகுப்பறைகளுக்காக, முதல் தளம் ஒன்றினைக் கட்ட குழு ரூ. 1.92,000 ஒதுக்கியுள்ளது.

26-3-78 அன்று ரிஷிகேஷில் நடைபெற்ற, ஆந்திர ஆசிரமத்தை நிறுவிய சுவாமி சச்சிதானந்த சரசுவதி அவர்களின் 8-வது நினைவு விழாவிற்குக் குழு ரூ. 3,500 வழங்கியுள்ளது.

12-10-77 அன்று பெங்களூர் ஆர். ஏகாம்பர முதலியார் அவர்களிடமிருந்து தி. தி. தேவஸ்தானம் இனமாகப் பெற்ற காலி மனையையும், 21-1-78 அன்று சென்னை ரோஜம்மாள் அவர்களிடமிருந்து தேவஸ்தானம் இனமாக பெற்ற நிலத்தையும் விற்றுவிடுவதென்று குழு முடிவு செய்துள்ளது.

திருச்சி மாவட்டம், லால்குடி தாலுக்கா, வெங்கடாசலபுரத்திலுள்ள 7.22 ஏக்கர் பரப்புள்ள தி.தி. தேவஸ்தான சாகுபடி நிலத்தை ஏலம் மூலமாக விற்க இரண்டு முறை ஏற்பாடுகள் செய்தும் யாரும் வாங்க முன்வராததால் மேற்படி நிலத்தை, அந்நிலத்தில் பன்னெடுங்காலமாக சாகுபடி செய்துவரும் 12 நபர்களுக்கு, சென்ட் ரூ. 70 என்ற வீதத்தில் விற்பதென்று குழு முடிவு செய்துள்ளது.

திருமலையில் பிரயாணிகள் விடுதியின் பொது உணவு விடுதியினை நடத்தும் உரிமை "உட்லாண்ட்ஸ் ஓட்டலரீஸ்' என்னும் நிறுவனத்திற்கு 30-4-79 வரை கொடுக்கப்பட்டுள்ளது. அவ்வுரிமையை மேலும் மூன்றுண்டுகளுக்கு (1-5-79லிருந்து), ஒவ்வொரு வருடமும் 10% வாடகையை உயர்த்துவதென்ற ஒப்பந்தத்தின் அடிப்படையில் நீட்டிக்கப்பட்டுள்ளது.

மங்களூரில் ஸ்ரீ வேங்கடேஸ்வரா சுவாமி கோயில் அரங்கில், தி. தி. தேவஸ்தானத்தாரின் தகவலறிவிப்பு நிலையம் ஒன்றினைத் திறப்பதென்று குழு தீர்மானித்துள்ளது.

ஐதராபாத், ஆம்பர்பெட் அருகேயுள்ள மத்திய காவல்துறை குடியிருப்புப் பகுதியில் ஸ்ரீ வெங்கடேஸ்வரா சுவாமி கோயில் ஒன்றினைக் கட்ட ரூ. 35,000 வழங்குவதென்று குழு முடிவு செய்துள்ளது.

இவ்வாண்டு இறுதியில் தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில், ஆந்திர மாநிலத்தில் நான்கு தாலுக்காக்களில் உள்ளூர் மக்களின் துணைக்கொண்டு பார்வையற்ற ஏழை எளியோர் பயன்பெறும் வகையில் இலவச கண் அறுவை சிகிச்சை முகாம்களை செயற்படுத்த (ஒரு வாரத்திற்கு) குழு தீர்மானித்துள்ளது. இவ்விடங்கள் பின்னர் அறிவிக்கப்படும்.

சில நகரங்களில், தி. தி. தேவஸ்தானத்தாரால் கட்டப்பட்ட தர்ம சத்திரங்களும், விருந்தினர் விடுதிகளும் அவ்வவ் நகர தேவஸ்தானங்களின் நேரடி நிர்வாகப் பொறுப்பில் விடப்பட்டுள்ளன. தற்போது, அவர்களுக்கு ஏற்படும் நஷ்டத்தை (பராமரிப்பு செலவினங்களால்) தவிர்க்கும் பொருட்டு, தர்ம சத்திரங்களிலும், விடுதிகளிலும் தங்கு வசதிகளுக்காக யாத்திரிகர்களிடமிருந்து வசூலிக்கப்படும் வாடகை விகிதங்களை உயர்த்த குழு அனுமதியளித்துள்ளது.

கலை நிகழ்ச்சிகள் பல நடத்தும் வகையில் கட்டடம் ஒன்றினைக் கட்டுதற்கு, தேவஸ்தானத்தின் பங்காக, நாக்பூர் ஆந்திரக் கலை சங்கத்தாருக்கு ரூ. 50,000 வழங்குவதென்று குழு முடிவு செய்துள்ளது.

தாள்ளபாக்க ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் நினைவு விழாவை போன்று, இவ்வாண்டு முதல் அன்னாரின் ஜெயந்தி விழாவையும் கொண்டாடுவதென்று குழு முடிவு செய்துள்ளது. 22-5.78 அன்று கொண்டாடப்படும் இவ் விழாவிற்கு ரூ. 3,000 ஒதுக்கப்பட்டுள்ளது.

கீழ்வரும் நபர்களை, சென்னையிலுள்ள தி. தி. தேவஸ்தான தகவலறிவிப்பு நிலையத்தின் உள்ளூர் ஆலோசனைக்குழுவில் எற்றுகொள்வதென்று குழு முடிவு செய்துள்ளது.

1. திரு. ஜே. வி. சோமயாஜுலு (தலைவர்)
2. திரு. டி. வி. கே. சாஸ்திரி (செயலாளர்)

**உறுப்பினர்கள்**

3. திருமதி. ராதாகிருஷ்ணன்
4. திரு. வி. ஜி. எஸ். வி. பிரஸாத்
5. மேஜர் ஜெனரல் கே.எஸ். ராஜா
6. திரு. வி. சதாசிவம்
7. திரு. பி. ஜானகிராம நாயுடு
8. திரு. எல். வி. ராமய்யா
9. திரு. கும்மடி வெங்கடேஸ்வர ராவ்
10. டாக்டர். சி. முத்துக் கிருஷ்ண ரெட்டி
11. திரு. நல்லி குப்புசாமி செட்டி
12. திரு. வி. பி. ராஜேந்திர பிரஸாத்
13. திரு. உம்மிடி கன்னய்ய செட்டி (கண்ணன்)
14. திரு. டி. தேவராஜ்

நாக்பூர் ராம் நகரிலுள்ள ஸர்வேஸ்வரர் ஆலயத்தின் புதுப்பித்தல் பணிகளுக்காக ரூ. 15,000 வழங்க குழு முடிவு செய்துள்ளது.

திருப்பதியில் தொழுநோய் மருத்துவ மனையாக விளங்கும் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஏழை இல்லத்தில், தற்போது நோயாளிகளுக்கென வழங்கப்பட்டிருக்கும் படுக்கை எண்களை 150 லிருந்து 200 ஆக உயர்த்துவதென்று குழு தீர்மானித்துள்ளது,

# ஆசிரியர் உரை

ஆதியும் அந்தமுமில்லாத் தனிப் பெருங்கருணையாளன்; பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரியுடையவன்; கருப்பைக்குள் முட்டைக்கும், கல்லினுள் தேரைக்கும் விருப்பமுற்று அமுதளிக்கும் மெய்யன்; இத்தகு பெருமைமிகு அப்பரம்பொருள் தன்னை நாடுவோரினும் பாடுவோர்பால் விருப்புற்று விரைந்து வந்து அருளுவது உறுதி. ''பண்ணொன்ற இசைபாடும் அடியார்கள் குடியாக, மண்ணின்றி விண் கொடுக்கும்...........'' என்றவாறு தன்னை இனிய இசையுடன் சொல்மாலையால் சூடுவார்க்கு இம்மை மறுமை உலக இன்பங்களை அள்ளித் தந்திடுவான் என்பதற்கு இறையடியார்கள் பலருடைய வரலாறே சாட்சி.

கீர்த்தனை என்பது இறைவனின் திருநாமத்தை, அவனுடைய அருமை பெருமைகளை, சிந்தனையோடும் நம்பிக் கையோடும் தெய்வ உணர்ச்சிக்குமறலோடும் பண்ணுடன் பாடப்படுவது. பாகவதம் கூறிய ஒன்பது வகைப் பக்தி வழிகளில் இக்கீர்த்தனை முறையும் ஒன்று. நாரதர், வால்மீகி, சுகர் முதலிய முற்கால பக்தர்களும், கௌரங்கா, நானக், துளஸி தாஸ், சூர்தாஸ் முதலிய பிற்கால பக்தர்களும் தாங்கள் புனைந்த கீர்த்தனைகளைக் கொண்டுதான் இறைவனை அறிந்து தெளிந்தார்கள். அத்தகைய பக்தி உணர்வுக்குச் சாதாரண மனிதனும் அடிமையாகும் வகையில், அவ்வுணவுர்க்கு ஒரு வடிவமும் நுணுக்கமும் தந்து, அடுத்த விநாடியில் வாழ்வாரோ வீழ்வாரோ என ஐயுறத்தக்க மனிதனைப் பொருள் கருதி பாடாது, அருள் கருதி, எல்லாம் அறிந்து, எங்கும் நிறைந்து, என்றும் உள்ள அப்பரமனைப் பாடி, பரகதிக்குப் பாதை வகுத்து, பாகவதடியார்களிடையே பட்டொளி வீசிடும் வகையில் இசை வானிலும், தெலுங்கு இலக்கிய வானிலும் பவனி வருபவர் கி.பி. 15 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த தெலுங்கு இலக்கிய நாயகர்களில் ஒருவரும், வேங்கடவனின் மேல் தீராக் காதல் கொண்டு ஊற்றெனச் சுமார் 32,000 கீர்த்தனைகளை வழங்கியவருமான ஸ்ரீ அன்னமாச்சார்யா அவர்கள். வாழ்த்த வாயும், நினைக்க மடநெஞ்சும், தாழ்த்த சென்னியும் தந்த அப்பரம்பொருளை சாமானியனும் மனமொழி மெய் களால் சிந்தித்து வந்தித்து, பக்தி உணர்ச்சியில் திளைத்துப் பரமனின் பரந்த உள்ளத்தை பாமரனும் எண்ணி உயர்கதி அடையும் வகையில் அன்னமாச்சார்யா தன்னுடைய கீர்த்தனைகளைக் கற்பனைத் திறத்துடனும், எளிமையான கிராமியச் சொற்களுடனும் பக்திச்சுவையும் காதற்சுவையும் இணைத்து உவந்தூட்டும் வகையில் புனைந்துள்ளார். 'பதகவிதா பிதா மஹா' என்றும், 'சங்கீர்த்தனாசார்யா' என்றும் ''ஹரி கீர்த்தனாசார்யா' என்றும் பலவாறு புகழப்படும் அன்னமய்யா வேத உபநிஷத் கருத்துக்களை, வைஷ்ணவத் தத்துவங்களை ஆழ்வார்கள் வழிநின்று, தம்பாக்களின் மூலம் எளிதாக்கினார்.

பெற்றோர்கள் காட்டிய அன்பைத் திரும்ப வழங்கும் போது, மனிதன் அதனை கடமையாக்கி விடுகின்றான். தன் பிள்ளைகளிடம் அவன் காட்டும் அன்பு காலப் போக்கில் பாசமாகி விடுகின்றது. ஆனால் தலைவன் தலைவிக்கிடையே பரிமாறப் படும் அன்போ தெய்வீக காதலாகின்றது. அவர்களுக்கிடையே நிலவும் குறைபாடுகளே அன்பின் நெருக்கத்தினால் நிறை களாக அனுபவிக்கப்படுகின்றன. ஆம் தலைவன்-தலைவி வாழ்க்கையில்தான்-அது களவாயினும், கற்பாயினும்-அன்பிற்கு அன்பு ஈடாகின்றது. இப் பால் உணர்ச்சியில் மயங்குவது மனிதனின் பலவீனமேயாயினும், அதுவே அவர்களை இணைக் கும் பலமான பாலமாகின்றது. இதனை மனதிற் கொண்டுதான் இவ்வுணர்ச்சியின் அடிப்படை ஆதிக்கத்தால்தான், இறை யடியார்கள் சிலர் தன்னை நாயகியாகவும் (ஜீவாத்மாவாகவும்) தான் வணங்கும் இறைவனை நாயகனாகவும் (பரமாத்மா வாகவும்) பாவித்து காதற் சுவை பொங்கப் பாக்கள் இயற்றித் தங்களை இறைவனிடம் மானசீகமாக இணைத்துக்கொண்டு, எதிர் கால மனிதனையும் அச்சுவையில் திளைக்கச் செய்து இறை ஈடுபாட்டினை அவனுள் தோற்றுவிக்க முயற்சியும் செய் தனர். அதில் வெற்றியும் பெற்றனர். அன்னமய்யாவும் அவர்கள் வழிநின்றே தம் பாக்களில் பெரும் பகுதியினை சிருங்கார சுவையில் தோய்த்து எடுத்துள்ளார். மேலும் வைணவ சமயத்தின் அடிப்படையாக விளங்கும் சரணாகதி தத்துவத்தின் சிறப்பினை, அதன் அவசியத்தைத் தம் பாக்களில் அறிவுறுத்தியதல்லாமல், பல சீர்திருத்தக் கருத்துக் களையும் புகுத்தி, தென்னிந்தியாவின் கலாசார மரபிற்கும், சமய வாழ்விற்கும் தம் படைப்புக்களை அர்ப்பணித்து, அவற்றை காலத்தால் என்றென்றும் அழியாவண்ணம் கனிந்த மொழியிலும், எளிய நடையிலும் படைத்து, நடையில் ஓர் இளமை மணம் பரப்பி, பக்தி உணர்ச்சி ஊட்டி, தம் முதிர்ந்த அனுபவத்தைப் புகட்டி ஆன்மிக, இலக்கிய, இசை, கலை, ஆகிய துறைகளில் ஒரு புதிய மறுமலர்ச்சியை ஏற்படுத்தி, புகழ்பெற்ற கீர்த்தனைகள் பல வழங்கிய க்ஷேத்ரய்யா, தியாகராஜர் போன்றோர்க்கு வழிகாட்டியாகவும் விளங்கச் செய்தார்.

எனவே பக்தி இலக்கியத்தில் மாபெரும் தொண்டாற்றிய இவ்வுலக மகாகவியை உலகறியச் செய்ய தி.தி. தேவஸ் தானம் சுமார் 30 ஆண்டுகளாக அவருடைய நினைவு விழாவை கொண்டாடி வருகின்றது. தற்போது அன்னாரின் பிறந்த நாள் விழாவையும் இவ்வாண்டிலிருந்து கொண்டாட உள்ளது. அன்னாரின் பெருமை, அவர் படைத்திட்டப் பக்தி பனுவல் களின் புகழ் ஆகியவற்றைப் பரப்பும் புனிதப்பணியில் ஒரு தனிப்பட்ட நிறுவனமட்டுமின்றி, இசை இலக்கிய உலகத்தைச் சார்ந்த அறிஞர்களும், கலைஞர்களும் பங்கேற்கவேண்டும். இல்லையெனின் அன்னமாச்சார்யாரின் அருங்கீர்த்தனைகள் யாவும் காணக்கிடைக்காப் புதையலாகவே இருந்து விடும்.

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

**15-3-78 அன்று திருமலையில் கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:**

திருப்பதி ஸ்ரீ பத்மாவதி மகளிர் கல்லூரி அருகே கட்டப்பட்டு வரும் வி. ஐ. பி. விருந்தினர் விடுதிக்கான மரச் சாமான்கள், திரைச் சீலைகள் ஆகியவற்றை வாங்குவதற்காக குழு ரூ. 1,14,000 ஒதுக்க முடிவு செய்துள்ளது.

திருப்பதி ஸ்ரீ பத்மாவதி மகளிர் கல்லூரியில் உள்ள புதிய கட்டடத்தின் மேல், வகுப்பறைகளுக்காக, முதல் தளம் ஒன்றினைக் கட்ட குழு ரூ. 1.92,000 ஒதுக்கியுள்ளது.

26-3-78 அன்று ரிஷிகேஷில் நடைபெற்ற, ஆந்திர ஆசிரமத்தை நிறுவிய சுவாமி சச்சிதானந்த சரசுவதி அவர்களின் 8-வது நினைவு விழாவிற்குக் குழு ரூ. 3,500 வழங்கியுள்ளது.

12-10-77 அன்று பெங்களூர் ஆர். ஏகாம்பர முதலியார் அவர்களிடமிருந்து தி. தி. தேவஸ்தானம் இனமாகப் பெற்ற காலி மனையையும், 21-1-78 அன்று சென்னை ரோஜம்மாள் அவர்களிடமிருந்து தேவஸ்தானம் இனமாக பெற்ற நிலத்தையும் விற்றுவிடுவதென்று குழு முடிவு செய்துள்ளது.

திருச்சி மாவட்டம், லால்குடி தாலுக்கா, வெங்கடாசலபுரத்திலுள்ள 7.22 ஏக்கர் பரப்புள்ள தி.தி. தேவஸ்தான சாகுபடி நிலத்தை ஏலம் மூலமாக விற்க இரண்டு முறை ஏற்பாடுகள் செய்தும் யாரும் வாங்க முன்வராததால் மேற்படி நிலத்தை, அந்நிலத்தில் பன்னெடுங்காலமாக சாகுபடி செய்துவரும் 12 நபர்களுக்கு, செண்ட் ரூ. 70 என்ற விதத்தில் விற்பதென்று குழு முடிவு செய்துள்ளது.

திருமலையில் பிரயாணிகள் விடுதியின் பொது உணவு விடுதியினை நடத்தும் உரிமை ''உட்லாண்ட்ஸ் ஓட்டலரீஸ்' என்னும் நிறுவனத்திற்கு 30-4-79 வரை கொடுக்கப்பட்டுள்ளது. அவ்வுரிமையை மேலும் மூன்றாண்டுகளுக்கு (1-5-79லிருந்து), ஒவ்வொரு வருடமும் 10% வாடகையை உயர்த்துவதென்ற ஒப்பந்தத்தின் அடிப்படையில் நீட்டிக்கப்பட்டுள்ளது.

மங்களூரில் ஸ்ரீ வேங்கடேஸ்வரா சுவாமி கோயில் அரங்கில், தி. தி. தேவஸ்தானத்தாரின் தகவலறிவிப்பு நிலையம் ஒன்றினைத் திறப்பதென்று குழு தீர்மானித்துள்ளது.

ஐதராபாத், ஆம்பர்பெட் அருகேயுள்ள மத்திய காவல்துறை குடியிருப்புப் பகுதியில் ஸ்ரீ வெங்கடேஸ்வரா சுவாமி கோயில் ஒன்றினைக் கட்ட ரூ. 35,000 வழங்குவதென்று குழு முடிவு செய்துள்ளது.

இவ்வாண்டு இறுதியில் தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில், ஆந்திர மாநிலத்தில் நான்கு தாலுக்காக்களில் உள்ளூர் மக்களின் துணைக்கொண்டு பார்வையற்ற ஏழை எளியோர் பயன்பெறும் வகையில் இலவச கண் அறுவை சிகிச்சை முகாம்களை செயற்படுத்த (ஒரு வாரத்திற்கு) குழு தீர்மானித்துள்ளது. இவ்விடங்கள் பின்னர் அறிவிக்கப்படும்.

சில நகரங்களில், தி. தி. தேவஸ்தானத்தாரால் கட்டப்பட்ட தர்ம சத்திரங்களும், விருந்தினர் விடுதிகளும் அவ்வவ் நகர தேவஸ்தானங்களின் நேரடி நிர்வாகப் பொறுப்பில் விடப்பட்டுள்ளன. தற்போது, அவர்களுக்கு ஏற்படும் நஷ்டத்தை (பராமரிப்பு செலவினங்களால்) தவிர்க்கும் பொருட்டு, தர்ம சத்திரங்களிலும், விடுதிகளிலும் தங்கு வசதிகளுக்காக யாத்திரிகர்களிடமிருந்து வசூலிக்கப்படும் வாடகை விகிதங்களை உயர்த்த குழு அனுமதியளித்துள்ளது.

கலை நிகழ்ச்சிகள் பல நடத்தும் வகையில் கட்டடம் ஒன்றினைக் கட்டுதற்கு, தேவஸ்தானத்தின் பங்காக, நாக்பூர் ஆந்திரக் கலை சங்கத்தாருக்கு ரூ. 50,000 வழங்குவதென்று குழு முடிவு செய்துள்ளது.

தாள்ளபாக்க ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் நினைவு விழாவை போன்று, இவ்வாண்டு முதல் அன்னாரின் ஜெயந்தி விழாவையும் கொண்டாடுவதென்று குழு முடிவு செய்துள்ளது. 22-5.78 அன்று கொண்டாடப்படும் இவ் விழாவிற்கு ரூ. 3,000 ஒதுக்கப்பட்டுள்ளது.

கீழ்வரும் நபர்களை, சென்னையிலுள்ள தி. தி. தேவஸ்தான தகவலறிவிப்பு நிலையத்தின் உள்ளூர் ஆலோசனைக்குழுவில் எற்றுகொள்வதென்று குழு முடிவு செய்துள்ளது.

1. திரு. ஜே. வி. சோமயாஜுலு (தலைவர்)
2. திரு. டி. வி. கே. சாஸ்திரி (செயலாளர்)

**உறுப்பினர்கள்**

3. திருமதி. ராதாகிருஷ்ணன்
4. திரு. வி. ஜி. எஸ். வி. பிரஸாத்
5. மேஜர் ஜெனரல் கே.எஸ். ராஜா
6. திரு. வி. சதாசிவம்
7. திரு. பி. ஜானகிராம நாயுடு
8. திரு. எல். வி. ராமய்யா
9. திரு. கும்மடி வெங்கடேஸ்வர ராவ்
10. டாக்டர். சி. முத்துக் கிருஷ்ண ரெட்டி
11. திரு. நல்லி குப்புசாமி செட்டி
12. திரு. வி. பி. ராஜேந்திர பிரஸாத்
13. திரு. உம்மிடி கன்னய்ய செட்டி (கண்ணன்)
14. திரு. டி. தேவராஜ்

நாக்பூர் ராம் நகரிலுள்ள ஸர்வேஸ்வரர் ஆலயத்தின் புதுப்பித்தல் பணிகளுக்காக ரூ. 15,000 வழங்க குழு முடிவு செய்துள்ளது.

திருப்பதியில் தொழுநோய் மருத்துவ மனையாக விளங்கும் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஏழை இல்லத்தில், தற்போது நோயாளிகளுக்கென வழங்கப்பட்டிருக்கும் படுக்கை எண்களை 150 லிருந்து 200 ஆக உயர்த்துவதென்று குழு தீர்மானித்துள்ளது,

# ஸ்ரீ வைஷ்ணவ சமய சாரம்

விசிஷ்டாத்வைதத்தில் சைவ விசிஷ்டாத்வைதம் என்றும் வைஷ்ணவ விசிஷ்டாத்வைதம் என்றும் இரு வகையாக பழங்காலந்தொட்டு இருந்து வருகிறது.

கி.பி. 9-ஆம் நூற்றுண்டில் ஸ்ரீகண்ட சிவாச்சாரியாரால் சைவ விசிஷ்டாத்வைதம் மக்களிடத்தில் நன்கு பரவியது. கி.பி. 11-ஆம் நூற்றுண்டில் ஸ்ரீமத் பகவத் ராமானுஜரால் (கி.பி. 1017-1137) வைஷ்ணவ விசிஷ்டாத்வைதம் தென்னிந்தியா முழுவதிலும், மற்றும் வட நாட்டில் சில இடங்களிலும் காற்று வேகமாகப் பரவிற்று.

சைவ விசிஷ்டாத்வைதத்தில் சிவனே இறைவன் என்றும், வைஷ்ணவ விசிஷ்டாத்வைதத்தில் மகா விஷ்ணுவே இறைவனென்றும் சொல்லப்படுகிறதே தவிர மற்ற விஷயங்களில் இரண்டும் அனேகமாக ஒத்திருக்கின்றன.

## ஸ்ரீவைஷ்ணவ விசிஷ்டாத்வைதம்:

ஸ்ரீ ராமானுஜருக்கு முன்பே, வைஷ்ண விசிஷ்டாத்வைதமானது போதாயனர், திரமிதாச்சாரியார், குஹதேவர், ஸ்ரீமத் நாதமுனிகள், ஸ்ரீ ஆளவந்தார் என்கிற யமுனைத் துறைவர் முதலிய பூர்வாச்சாரியர்களால் அனுஷ்டானத்திலிருந்து ஸ்ரீ ராமானுஜர் காலத்தில் நாடெங்கும் பரவிற்று என்று கூறலாம். ஸ்ரீ மகா விஷ்ணுவை இறைவனுக வழிபடுபவர் வைஷ்ணவர், ஸ்ரீ மத்வர், சைதன்யர், ராமானந்தர், வல்லபாச்சாரியார், மீராபாய் ஆகியோரால் ஏற்படுத்தப்பட்ட மதப் பிரிவுகள் எல்லாம் வைஷ்ணவமே ஆகும். ஆனுல் ஸ்ரீ பகவத் ராமானுஜரால் உபதேசிக்கப்பட்ட மதத்திற்கு, 'ஸ்ரீ வைஷ்ணவம்', என்கிற தனிப்பட்ட, சிறப்புப் பெயர் வழங்குகிறது. எனவே வேதாந்த மதத்தில் பழமையானது வைஷ்ணவ மதம். அதன் பெருமைகள் வேதங்களிலும், பன்னிரண்டு ஆழ்வார்களும், வேதாந்ததேசிகர் போன்ற ஆச்சாரியர்களும் அருளிச் செய்த பாசுரங்களிலும் தெள்ளத்தெளிய விளக்கப்படுவதைக் காணலாம்.

ஸ்ரீ பகவத் ராமானுஜர் அவதரித்து விசிஷ்டாத்வைதம் என்ற மதத்தை நிறுவினுர் என்று பொதுவாகக்கூறலாம். இதனுல் ஸ்ரீமந்நாராயணனுடைய திருக்கல்யாண வீபூதிச் சிறப்புக்களை ராமானுஜர் மக்களிடையே சாதிவேற்றுமையின்றி பரப்பினுர். வைணவத்தின் அடிப்படைத் தத்துவம் பரம்பொருளாகிய ஸ்ரீமந் நாராயணனே பரதெய்வம் என்பதாகும். பரம்பொருளாகிய ஸ்ரீமந் நாராயணன் நம்மை ரக்ஷிப்பவனுகவும், அவன் சேஷி என்றும், ஜீவாத்மாக்கள் எல்லாம் அவனுக்குச் சேஷன் என்றும், நாராயணனே நமக்குத் தனிப்பட்ட நாயகன் என்றும், நாமெல்லோரும் அத்தெய்வத்திற்கு அடிமையாக வாழ்ந்து எம்பெருமானுக்கு ஒழிவில் காலமெல்லாம் உடனுக மன்னி வழுவிலா அடிமை செய்யவேண்டும் என்பதே ஆழ்வார்கள் திருவுள்ளமாகும்.

ஸ்ரீமந்நாராயணனுக்குச் சேவை செய்து, அவனது அருளால் அறம், பொருள், இன்பம் வீடு என்ற நான்கு பேறுகளைப் பெற விசிஷ்டாத்வைத மதம் வழிகாட்டுகிறது. பரம்பொருள் அர்ச்சாவதாரமாக நமது திருக்கோயில்களில் எழுந்தருளி இருக்க, பிரதிஷ்டை செய்யவும் தினமும் திரிகால பூஜை செய்யவும், உற்சவங்களை பய பக்தியுடன் நடத்தவும் ஒரு முறையினை வகுத்துத்தருவது ஆகமம் என்பதாகும்.

வைகானஸம் என்றும், பாஞ்சராத்திரம் என்றும் வழிபாடு நடைபெற்று வருவது தெரிந்ததே! ஆகம விதிப்படி செயலாற்றும் இத்திருக்கோயில்களில் தென்கலை, வடகலை என்ற இரு பிரிவுகள் உள்ளன. இரு பிரிவுகளும் ஸ்ரீமந்நாராயணனையே பரமாத்மாவாக வழிபட்டு வருகின்றன.

ஸ்ரீமந்நாராயணனையே இறுதியில் அடைய பக்தி, ப்ரபத்தி (சரணுகதி)

திரு. ஆர். பத்மநாபன், B.A., B.T.
வேலூர் - 12.

என்ற உபாயம் சொல்லப்படுகிறது. ஸ்ரீ கீதாபாஷ்யத்தில் சரமஸ்லோகத்திற்குப் பொருள் எழுதுகையில், 'பக்தி யோகம் மோக்ஷ சாதனம்' என்று ராமானுஜர் குறித்திருப்பதால் பக்தி யோகமே நமக்குச் சிறந்ததென்று கொள்ள வேண்டியிருக்கிறது.

எனவே வைணவம் பக்திக்கு முதலிடம் கொடுக்கிறது; மக்களும் பின்பற்றுவதற்கு மிகவும் எளிதாகவே அமைந்திருக்கிறது; அதனுல் மக்களிடையே காற்றுபோல் பரவி ஒளிவிட்டு, மேன்மையுடன் விளங்குகிறது. ஸ்ரீ வைஷ்ணவத்தைப்பற்றி மேலும் தெரிந்து கொள்ள ஆழ்வார்கள், ஸ்ரீ ராமானுஜர் மேலும் மற்ற ஆச்சாரியர்களுடைய நூற்றுக்கணக்கான கிரந்தங்களைக் கற்று மனத்தெளிவு பெறலாம்.

ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம்
சரணம் வ்ரஜ ।
அஹம் த்வா சர்வ பாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மா சுச: ॥

—பகவத்கீதை 18-66.



# திருவேங்கடவனின் திருவருள் தேவி



திரு. எஸ். வி. ராமசுவாமி,
செகந்திராபாத்

ப்ரபஞ்சங்கள் யாவும் அவன் இடம். இதனைச் சீர் செய்து, தோன்றும் சேதனவர்க்கங்களைப் பாதுகாத்துப் பண்படுத்துவது அவன் அருள் தொழில். இதனை ஆழ்வார்கள் மொழிகளும், உபநிடதங்களும் பலவாறு பேசக் காண்கின்றோம். இப்பிரபஞ்சமாகிய உழுநிலத்தில் தோன்றும் சரணாகதர்கள் என்ற பயிரைக் காக்க பரண்கட்டிப் பயிர் காப்பாரைப் போல் அவன் திருமலை என்ற உன்னத ஸ்தலத்தில் நின்று கண்காணிக்கும் உழவனே அவன். பயிர்களை வளர விடாது தடுக்கும் புற்பூண்டுகளை (காமக்ரோதங்களை) களைகின்றான். தன் அருளைப் பொழிகின்றான்.

ஆனால் தக்க காலங்களில் அவன் தயா தேவிதன் அருள் மழையை இப்பயிர்களின்மீது வர்ஷிக்கின்றாள். கர்ம பந்தத்தினால் வதங்கி வாடிய இப்பயிர்கள் செழித்துக் களித்து எழுகின்றன: இதனை இந்த ஸ்லோகத்தில் ''ஸமயோ பநதை: தவப்ரவாஹை: என்று இக்கவி சுட்டும் அழகு ஈண்டு காணத் தக்கது.

இப்படித் துளிர்ந்து எழும் பயிர்களைக் கண்டுக் களிக்கின்றான் இப்பிரபஞ்ச க்ருஷியில் ஈடுபட்ட திருவேங்கடவன்.

இப் பிரபஞ்சத்தை வாழவைத்தும் அதனால் அவனை மகிழ்வித்தும் விளையாடுகிறாள் தயா தேவி. இவ்விளையாட்டையே கவி,

> ஸமயோ பநதைஸ் தவப்ரவாஹை:
> அநுகம்பே க்ருத ஸம்ப்லவா தரித்ரீ
> சரணாகத சஸ்ய மாலிநீயம்
> வ்ருஷசைலேசக்ருஷீவலம் திநோதி.

என்று கொண்டாடுகின்றான்.

அன்று தேவர்களுக்குச் சாகா மருந்தாகிய அமுதத்தை ஈந்தது திருப்பாற்கடல். அத்திருப்பாற்கடலில் தோன்றியவளே நீ. நீயும் அத்திருப்பாற்கடல் தன்மையவளே.

நல்ல மனத்துடன் உன்னிடம் சரணமடையும் மக்களுக்கு நீயும் ஓர் அமுதத்தையளிக்கின்றாய். சந்திரனைப் போல குளிர்ந்த திருவேங்கடவன் உன்னுடைய ப்ரேரேபணையாலல்லவா இவ்வுலகில் அர்ச்சாவதாரமாய் திருமலையில் தோன்றி வழிபடுவோர்க்கு மோக்ஷ பர்யந்தமான எல்லா ஐஹிக ஆமுஷ்மிக பலன்களை வாரி வழங்குகின்றான்.

சந்திரன்போன்ற திருவேங்கடவன் அமுதத் திருமேனி ஸப்தகிரி மேல் நின்று, வழிபடும் மக்களுக்கு எல்லாக் குறைகளையும் நீக்கி அமரத்வத்தையும் அளிப்பதற்குக் காரணம் அவனுள்ளத்தே குடிகொண்டுள்ள தயா தேவியான நீதானே காரணம் என்று ரஸிக்கிறார் ஸ்ரீ தேசிகன் இந்த ஸ்லோகத்தில்.

> கலசோததிஸம்பதோ: பவத்யா
> கருணே ஸந்மதி மந்த்த ஸம்ஸ்க்ருதாயா:
> அம்ருதாம் ச மவைமி திவ்யதேஹம்
> ம்ருத ஸஞ்சிவன மஞ்சனசைலேந்தோ:

அஞ்சனகிரி நாதன் ஒரு குளிர்ந்த கடல் போன்றவனே, என்றாலும் ஒரு சமயம் அக்கடலும் பொங்கிக் கொந்தளிக்கின்றது. 'ப்ரளயம்' என்ற ஓர் நிலையை அவன் திருவுள்ளம் ஸங்கல்பிக்கும்போது அச்சங்கல்பம் எனும் நாட்டியக்காரி ஓர் கோரத் தாண்டவம் புரிகின்றாள்.

கடல்கள் பொங்கி எழுகின்றன! அக்கோரத்தாண்டவத்தில் எல்லா உலகமும் மங்கி உயிர்கள் ஒடுங்கி ஆன்மாக்கள் அசைவின்றி மெலிந்து வாடி வீழ்கின்றன. ஆனால் உன் குளிர்ந்த தோற்றம் அவன் ஸங்கல்பமாகிய அக்கோரத்தாண்டவத்தின் திசையையே திருப்பிவிடுகின்றது.

மறுபடியும் படைப்பு என்ற ஓர் இனிய ஆனந்த நடனம் துவங்குகின்றது. ஏ! தயா தேவி, அநுக்ரஹம் என்ற எண்ணம் அவனுள்ளத்தே துளிர்க்கச் செய்கின்றாயோ?

உன்னை வணங்கி நல்வழிப்பட்டு எல்லா ஆன்மாக்களையும் செயல்பட அவைகளுக்கு ஏற்ற உடலையும் இந்திரியங்களையும் அளித்து புத்துலகங்களை சிருஷ்டி செய்வான்.

இப்படி உன் கருணைச் செயல் என்ற படைப்பினுல் எல்லா ஆன்மாக்களும் உஜ்ஜீவிக்க நீயே வழி செய்கின்ருய்.

''உன்னுடைய தயா கார்யங்கள் தான் என்னே'' என்று வியக்கின்ருன் கவி.

''ஜலதேரிவ சீததா தயே த்வம்
வ்ருஷசைலாதிபதே ஸ்வபாவ பூதா
ப்ரளயாரபடீ நடீம் ததீக்ஷாம்
ப்ரஸபம் க்ராஹயஸிப்ரஸத்தி
லாஸ்யம்''

இப்படி அருள் நிறைந்த ஆண்டவனுக்கும் சில சமயம் கோபம் வருவதுண்டு. ஆனல் அவன் உள்ளத்திலேயே வாசம் செய்யும் தயாதேவி, அவன் கோபத்தையும் கூடப் பயன்படுத்திக் கொள்கின்ருள்.

ஏன்?

பக்தர்களைக் காப்பதற்கு.

சந்தர்ப்பம் நோக்கி தன் பக்தர்களுக்கு அநுகூலம் செய்யும் தயாதேவி, திருவேங்கடவன் கோபத்தை அவன் அடியார்களின் விரோதிகள்பால் திருப்பிவிடுகின்ருள்.

தன்னை நலிந்தாலும் மன்னித்துவிடக்கூடிய அருள் மிகுந்த அவன் தன்னடியார்களை நலியும் அதமர்களை மட்டும் மன்னிக்கமாட்டான். அப்பொழுது தோன்றும் அவன் சீற்றம் பாகவத அபசாரப்படும் அதமர்களை நாசம் செய்யும்படி தயா தேவி செயல்படுத்துகிருள்.

இப்படி எம்பெருமான் திருவுள்ள நிலைகள்யாவற்றையும் அவன் அடியார்கட்கு அநுகூலமாக்கும் இத்தயாதேவியின் எழிலைப் பேசுகின்றது இந்த ஸ்லோகம்,

''ப்ரணத ப்ரதிகூலமூல காதீ
ப்ரதிக: கோபி வ்ருஷா சுலேச்வரஸ்ய
கணமே யவஸாபசாய நித்யா
கருணே கிங்கரதாம் தயோப
யாதி||''

(ஸ்ரீனிவாஸனுடைய கோபமும் தயா தேவிக்கு அடிமை செய்கின்றது. அக்கோபத்தைப் பாகவத அபசாரப் படும் பகைவர்களை ஒடுக்க உபயோகப் படுத்துகிருள் தயா தேவி)

இறைவன் ஸ்வதந்திரன். அவன் ஸங்கல்பம் நிறைவேற வேறு எந்த உதவியும் அவனுக்குத் தேவையில்லை. அவனுக்குள்ள சக்தி வீரீயம் முதலிய நற்குணங்களுக்கு எல்லையே கிடையாது.

ஆனல் அவனை வழிபடும் பெரியோர்கள் இந்தக் குணங்களையெல்லாம் விடுத்து அவன் தயை என்ற (குணத்தை) உன்னையே சரணடைகின்றனர்.

ஏன்?

அவர்கள் அறிவார்கள். அவனுடைய பிற குணங்களெல்லாம் தவறு செய்தவர்களைத் தண்டிக்கத்தான் பயன்படுகின்றது. ஆனல் தயை என்ற உன்னைச் சரணடைந்தால் மன்னிப்பு பெற்று காக்கப்படுவார்கள் என்று.

எனவே ஆச்ரிதர்கள் வேங்கடவனுடைய ஒப்பற்ற சக்திகள் யாவற்றையும் விடுத்து அவன் கருணை என்ற உன்னையே வழிபட்டு உய்கின்றனர்.

உன்னைச் சரணடைந்தவர்களை, (பாபிகள் ஆனலும்) அவனல் தண்டிக்க முடிவதில்லை.

''அபஹிஷ்க்ருத நிக்ரஹாந் விதந்த:
கமலாகாந்த குணாத் ஸ்வதந்த்ர
தாதீந்
அவிகல்பம் அனுக்ரஹமதுஹானும்
பவதீ மேவ தயே பஜந்தி ஸந்த: ''

''அண்டினவர்களுக்கு எல்லா அபீஷடங்களையும் அருள்கின்ருன் ஏழுமலையான்'' என்றஓர் வள்ளல் தன்மையை அவன் எவ்வாறு பெற்ருன்?

கருணை சுரக்க வைக்கும் நீ அவன் உள்ளத்தில் நீங்காது வாழ்வதாலன்றோ அவனுக்கு ''தயாளு'' என்ற பட்டம் வந்தது.

ஈண்டு இக்கவி ஓர் தனி மணத்தை விசவைக்கின்ருன் தன் கவி நோக்கில்.

''ஏ, கருணை வடிவான தயா தேவியே சற்று ஆராய்ந்தால் உன்னிடத்தில் சற்றும் கருணையே இல்லை என்றுதான் தோன்றுகின்றது!''

''என்ன! அப்படிப் பேசிவிட்டாயே?''

''ஆம், ஸ்ரீனிவாஸனிடம் அடைக்கலம் புகுவோர்கள் பாபங்களெல்லாம் உன்னைக் கண்டு அஞ்சி ஓடி ஒளிகின்றன! அப்பாபங்களிடம் சற்றும் கருணையின்றி விரட்டி விட்டு பக்தர்களை ஸ்ரீனிவாஸன் கருணைக்கு பாத்திரமாக்கிவிடுகின்ருய்.''

இந்த ஸ்லோகத்தில் தயாதேவியைச் சிரிக்கவைக்கும் ஹாஸ்யத்தை நுகர்கின்ருேம்.

''கமலா நிலையஸ் த்வயா தயாளு:
கருணே நிஷ் கருணா நிரூபணே
த்வம் |
அத ஏவ ஹி தாவகாச்ரிதானும்:
துரிதானும் பவதி த்வதேவ பீதி: ||

திருமலையை அண்டுவதற்கும் அருகதையற்றபாபிகளிடத்தும் நீ கருணை காட்டுகின்ருய். செய்த பாபங்களுக்குப் பச்சாதாபப்பட்டு, ''முடிந்த பிராயச்சித்தங்களைச் செய்து கொண்டாவது அவன் திருவடியில் சென்று விழுவோம்' என்ற எண்ணத்தையும் நீதானே அவர்களுக்கு உண்டு செய்கின்ருய்.

ஆம்! பாபம் செய்யாதவன் யார்? இந்த நிலையில் பாபம் செய்யாதவனை மட்டும் காப்பது என்ற ஸங்கல்பம் நிலைகுலைந்தது. அவனல் காப்பாற்றப்படக் கூடிய பாபமற்ற ஒருவன்கூட அவனுக்குக் கிடைக்கவில்லை. எங்கே கிடைப்பான்!

எனவே மக்கள் செய்யும் பாபங்களையே தன் எதிரியாக நினைத்து அவைகளோடு போரிட சார்ங்கமென்ற தன் வில்லுடன் திருமலையையடைந்தான். ஆம். அத்திருமலையைக் கண்டதுமே பாபங்கள் ஓட ஆரம்பிக்குமல்லவா! மேலும் தயா தேவியையே கவசமாகப் பூண்டு அவளுடன் திருமலையில் நித்யவாஸம் செய்யத் தொடங்குகின்ருன். திருமலையே ஓரளவு நமது பாபங்களைப் போக்கி நம்மை ஆங்கு கோயில் கொண்டுள்ள




# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

மற்றும்

# ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்

## தி. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஷ்ரமம், ரிஷிகேஷ் உ.பி.

### ஆர்ஜித அட்டவணை

| பொது | | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் | ஸ்ரீ சந்திரமௌளீ-ஸ்வர சுவாமி கோயில் |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| அர்ச்சனை | டிக்கெட் ஒன்று | 2-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| சகஸ்ரநாம அர்ச்சனை | ,, | 5-50 | 5-00 |
| தோமாலந்தார தரிசனம் | | 5-00 | — |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| | | ஸ்ரீ ராஜலக்ஷ்மி அம்மையார் கோயில் | ஸ்ரீ பார்வதி அம்மையார் கோயில் |
|---|---|---|---|
| அர்ச்சனை | ,, | 1-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| நைவேத்தியங்கள் | | ரூ. |
|---|---|---|
| தத்யோதனம் | முழுத் தளிகை | 45-00 |
| புளியோதரை | ,, | 45-00 |
| பொங்கல் | ,, | 60-00 |
| இனிப்புப் பொங்கல் | ,, | 65-00 |

குறிப்பு : ஒவ்வொரு நைவேத்தியத்திற்கும், ஆர்ஜித கட்டணத்தைத் தவிர மேற்கொண்டு சிங்கமொருவுக்காக ரூ. 3/- செலுத்த வேண்டும். மேலும் அரைக்கட்டண விகிதத்தில், இறைவனுக்கு அரைத்தளிகை நைவேத்தியமும் பக்தர்கள் செய்விக்கலாம்.

ஸ்ரீனிவாஸனை அண்டவைக்கின்றது ஆங்கு அவன் திருமேனியின் கவசமாய் விளங்கும் தயாதேவி நம் பாபங்கள் அவன் திருவுள்ளத்தில் பாயாமல் தடுத்து நம்மை அவன் கருணைக்கு இலக்காக்கிவிடுகின்றாள். எனவே தான் பாபிகளும் தைரியமாகத் திருமலையை அடைய முடிகின்றது எனப் பேசும் பேச்சே இச் சுலோகம்.

''கருணே துரிதேஷு மாமகேஷு
ப்ரதிகாராந்தர துர்ஜயேஷு கிந்நː
கவசாயிதயா த்வயைவ சாரங்கி
விஜயஸ்தானமுபாச்ரிதோ வ்ருஷா
த்ரிம்''

''அம்மா! தயா தேவியே! ஸ்ரீனிவாஸனை வழிபடுவோர் பாபங்களை நீ விழுங்கிவிடுகின்றாய். எல்லையற்ற கருணையாகிய உன் பசிக்கு அவர்கள் பாபம் எம்மட்டு! உண்மையிலேயே நீ பாபங்களை உண்டுஜீவிப்பவளாயின்என் போன்ற தீவினையாளர்களைக் கடாக்ஷித்தாலல்லவோ உன் பசிதீரும்.'' என்றெல்லாம்பேசும் இக்கவி தன்னைப் பாபங்கட்கெல்லாம் அரசனாகக் காண்கின்றான்.

இதற்கு நேர்மாறாக தயா தேவியை எல்லையற்ற நற்குணங்களுக்கு அரசியாகக் காண்கின்றான். ஆம். இருவருக்குமே ஒரு விதத்தில் சமமான பெருமையே!

ஆனால் இப்பெருமை அவளுக்கு எப்படிப் பரிமளிக்கும் என்று யோசிக்கின்றான். பேசுகின்றான்.

'அம்மா, தயா தேவியே, நீ என் மேல் போர்த் தொடுக்க வேண்டும். பாபமென்னும் என் ராஜ்யங்களையெல்லாம் ஜெயித்து உன்னுடைய தாக்கிக் கொள்ளவேண்டும். என்னையும் சிறை செய்து, நீ அகலாது நித்ய வாஸம் செய்யும் திருவேங்கடவன்பால் என்னை இழுத்துச் சென்று அவன் திருவடிகளில் என்னைப் பிணைத்து விட வேண்டும்' என்று தயா தேவியிடம் மன்றாடுகின்றான் இக்கவி ஸார்வ பௌமன். இதோ ஸ்லோகம்.

''அஹ மஸ்ம்யபராதி சக்ரவர்த்தீ
கருணேத்வஞ்ச குணேஷுஸார்வ
பௌமீ।
விதுஷீ ஸ்திதிமித்ருசீம் ஸ்வயம் மாம்
வ்ருஷ சைலேச்வர பாதஸாத்குரு
த்வம்॥''

(தொடரும்)

# மாய மான் மாரீசன்

மாரீசன் கம்ப ராமாயணத்தில் வரும் சிறிய கதை மாந்தரில் ஒருவன். இராவணன் வேண்டுதலால் மாய மானாகச் சென்று காவிய நாயகியாகிய சீதையை மயக்கி, இராமன் அறிவையும் மங்கச் செய்து கதை மேலே தொடர்வதற்குக் காரணமான ஒரு செயலை நிகழ்த்தியவன். அவன் வருகையால் முதன்மை மாந்தர்களாகிய இராமபிரான், இராவணன், சீதை, இலக்குவன் இவர்தம் பண்புகளைக் காவியம் படிப்போர் நன்றாகத் தெரிந்து கொள்ள முடிகின்றது. மற்றும் கும்பகருணன் விபீடணன் இவர்தம் செயல்களின் நுட்பத்தை உணர்தற்கும் இவனது செயல் உறுதுணையாகின்றது. மாரீசனைப் பற்றியும் அவன் மாயமானாகி நிகழ்த்திய செயல் குறித்தும் கம்பன் கூறும் கருத்துக்களைச் சுருக்கமாக ஆய்வதே இக் கட்டுரையின் நோக்கம்.

இம்மாரீசன் யாவன்? இக்கேள்விக்கு விடையைக் கம்பன் பால காண்டத்திலேயே தந்துவிடுகின்றான். தாடகையின் மைந்தர்கள் சுவாகு, மாரீசன் இருவரும்; இராவணனின் தாய்வழிப் பாட்டனாகிய சுமாலியால் வளர்க்கப் பெற்றவர்கள்; அதனால் இராவணனுக்கு மாமன் முறையினர். ஒரு காலத்தில் அரக்கராயினர் என்கின்றது கதை. இராமனின் முதற்போரில் தாடகை பட்டனள். வேள்வி காத்த நிலையில் சுவாகுவும் கொல்லப் பெற்றான். மாரீசன் மட்டும் தப்பினான். இராம இலக்குவரை வஞ்சித்து மாய்க்க முயன்றும் இயலாது அவர்களால் கொல்லப்படாமல் வாழ்ந்து வந்தவன். தவம் செய்தலை மேற்கொண்டு வனத்திலே தங்கியவன்.

சூர்ப்பணகை சூழ்ச்சியால் காம வயத்தனான இராவணன் நள்ளிரவிலும் சீதையின் உருவெளித் தோற்றம் கண்டு கலங்குகின்றான். தான் காணும் நங்கை சீதையே என உணர்ந்த அவன் அவளைக் கவர்தற்கு மாரீசன் உதவியை நாடுவது என்ற முடிவிற்கு வருகின்றான். ஆம் தன் அமைச்சர்களுடன் ஆலோசித்து அவர் கூற்றின்படியே அவன் அம் முடிவிற்கு வந்து தனியனாய் மாரீசன் இருப்பிடத்தை நோக்கிச் செல்கின்றான். மூவுலகின் தனி நாயகனான இராவணன் எவரையும் ஏவல் கொள்ளும் அவன்—நள்ளிரவின் போதும் தன் தங்கையை அழைத்து வரச் செய்து அளவளாவும் அவன்—தனியனாய் மாரீசனை நாடிச் செல்கின்றானெனில் இவன் பெற்றிருந்த தகுதி பற்றி நாம் ஒருவாறு உணரலாம். இராவணனின் காமத் தன்மையின் ஆழம் எத்தகையது என்பதும் இதனால் புலனாகும். இச்செய்தியைத் தெரிவிக்கின்ற கம்பன்,

'இந்திய மடக்கி நின்ற மாரீசன் இருக்கை சேர்ந்தான்' என்று கூறுவது நினைவிலிருக்கத் தக்கது.

இராவணன் தனித்துத் தன்பால் வருவதனைக் கண்ட மாரீசன் சிந்தை பொருளுற்று வெருவுகின்றான். தனியே வந்ததென்? என்று வினவுகின்றான். தன் எண்ணத்தைப் படிப்படியாக எடுத்துரைத்து அவனைத் தன் செயலுக்கு உடன் படுமாறு செய்ய முயல்கின்றான் இராவணன். தன் பொற்பும் மேன்மையும் புகழோடும் போயின; வானவரும் நாண வசை அடுத்தது; மானிடவர் வன்மை தரித்தவரானார்—என்று கூறிப்பின் அவர் வாளால் நின் மருகிக்கு நாசி இழக்கும் நிலை நேர்ந்தது; என் மரபுக்கும் நின் மரபுக்கும் இதனினும் மேலான இழிவு வேறுண்டோ? என்று கேட்கின்றான். என் தம்பிமார் கரதூடணர் அழிவுற்றனர்; உன் மருகர் ஒரு மானுடன் வாளால் பட்ட பிறகும் நீ அதுபற்றிக் கவலாது இருகை தலை சுமந்து தவம் செய்து கொண்டு இனி திருக்கலாமா? அப்பழி தீர உன் உதவி வேண்டி வந்தேன் என்று கூற வேண்டுவனவற்றை ஒழுங்குற எடுத்தியம்புகின்றான். பின்னர் இராமனுடன் போர் செய்ய விருப்பமின்று; அவனுடன் வாழும் வஞ்சியை வவ்விடத் துணை நாடி வந்தேன் என்று முடிக்கின்றான்.

இராவணனுக்கு மாரீசன் கூறும் அறிவுரைகள் மாரீசனைத் தெளிந்த அறிவாளனாகவும்—அறவாணனாகவும்—சொல் வல்லனாகவும் காட்டுகின்றன. இராவணனது கடைசிப் பேச்சைக் கேட்டதும் அவன் 'சிச்சீ எனத் தன் மெய்ச்செவி பொத்தித் தெருமந்தான்' என்கின்றார் கம்பர். பின் அவனைப் பார்த்து நீ நின் வாழ்வை முடித்தாய் - மதியற்றாய் என்று கூறுகின்றான். அவனிலும் வயதில் மிக்க ஒருவன் பேச்சுப் போல் தொடங்கி 'நீ இப்படிப் பேசுவது ஊழ்வினையின் காரணமாகவே இருக்க வேண்டும்' என்று உறுதி பல எடுத்து உரைக்கின்றான்: பிறர் மனை வாழும் தாரம் கொண்டாரைத் தருமம் ஈரும் என்

டாக்டர். கு. தாமோதரன்,
திருப்பதி-2.

பதை அறியாயா? என்று சான்று பல காட்டித் தெளிவிக்கின்றான். இராமனின் வலிமையையும் அவனைக் கண்டு தன் நெஞ்சு கம்பித்தலையும் அவன் எடுத்து விளக்குகின்றான்.

மாரீசன் உரைகள் யாவும் இராவணனுக்குச் சினத்தையே மூட்டுகின்றன. பழம் பெருமையை எடுத்துரைத்துத் தனக்கு இராமலக்குவரால் இப்போது நேர்ந்துள்ள இழிவையும், தன் தங்கை மூக்கிழந்த நிலைமையையும் திரும்பக் கூறுகின்றான்: தான் மாமன் என்றும் மூத்தவன் என்றும் கூறி, அவன் எடுத்துரைத்த அறிவுரைகளையெல்லாம் உதறிவிட்டு 'நீ அமைச்சன் அல்ல ஆலோசனை கூற; என் ஆணை




# எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. கே. ராகவாச்சாரி,
நியூஸ் ஏஜெண்ட்,
ரமணி ஸ்டோர்ஸ்,
கும்பகோணம்.

திரு. வி. வி. ரங்கசுவாமி,
ஸ்ரீ வேங்கடேசாயா ரங்கநாதம்
சிட்பண்ட்ஸ்,
6-14-140, கோட்டூர் (சாலை)
பாளையங்கோட்டை - R.M.S.
திருநெல்வேலி-2.

திரு. கே. ரங்கசாமி நாயக்கர்,
குமாரபுரம்,
நல்லை (அஞ்சல்)
கோவில்பட்டி R. S.
சாத்தூர் (வழி)
இராமநாதபுரம் மாவட்டம்.

திரு. பி. கே. சுந்தரராஜன்,
21, முராரிவரதய்யர் தெருவு,
சேலம் டவுன்.

திரு. எஸ். ராமகிருஷ்ணய்யா,
ஸ்ரீ மாருதி காபி வர்க்ஸ்,
ஸ்டேஷன் ரோடு,
ஹோஸ்பெட் (அஞ்சல்) R. S.
கர்நாடக மாநிலம்.

திரு. சி. எஸ். குண்டுராவ்,
845, பி. பி. கார்டன்,
கே.ஆர். மொஹல்லா (அஞ்சல்)
மைசூர்-4.

திரு. எஸ். ஸ்ரீகாந்த ஐயர்,
7/114, செல்லாண்டி அம்மன்
கோயில் வீதி.
19—வது பிளாக்
மேட்டூர் அணை ஆர். எஸ்.

திரு. ஆர். சம்பத் குமார்,
35, வனப்பட்டரை வீதி,
தெப்பக்குளம்.
திருச்சி-2

திரு. வாசு வெங்கடேஸ்வரன்,
ஸ்ரீ கண்ணன் ஸ்டோர்ஸ்,
மெயின்பஜார், எம். ரெட்டிபட்டி,
(via) அருப்புக்கோட்டை.

திரு. கே. பி. ஆர். சுவாமி,
106, மஹீம் மேன்சன்,
ஸ்டேஷன் ரோடு,
மஹீம், பம்பாய்-16.

பாஸ்கர் நியூஸ் ஏஜென்சி,
டெய்லி மார்கட்,
ஜெய்பூர் (அஞ்சல்)
கோராபுட் மாவட்டம்.

தினமணி ஸ்டோர்ஸ்,
8/1, பழைய போஸ்ட் ஆபிஸ் வீதி
கோயம்புத்தூர்-18

திரு. ஏ. சி. நரசிம்மன்,
9, அமுத நிலையம்,
ஐக் அக்ரஹாரம்.
ஆற்காடு (வ. ஆ. மாவட்டம்)

டாக்டர். பி. கே. கேசவன்.
செவன் ஹில்ஸ்,
2, எம்.எம்.எம். ரெட்டி வீதி
ஜோலார்ப்பேட்டை.

திரு. திட்டகவி. சுப்ரமண்யம்,
15,6-வது வீதி,
சுப்ரமண்யபுரம், காரைக்குடி.

திரு. ஏ. அருணாசலம்,
22/13. வாளிபாளையம்.
1-வது வீதி, திருப்பூர்.

திரு. எஸ். என். கிருஷ்ணசர்மா
10-354 சின்னக்கடை பஜார்,
பரமக்குடி (அஞ்சல்)
இராமநாதபுரம் மாவட்டம்.

இலட்சுமி புக் ஸ்டால்,
5-2-64, பாலாஜி வாடா,
பெத்தபல்லி (அஞ்சல்)
கரீம்நகர் மாவட்டம். (ஆ.பி.)

திரு. கே. எஸ். கோதண்ட
ராமய்யா, M.A., B.O.L,.,B.T.,
ஓசூர். தர்மபுரி மாவட்டம்.

திரு. கே. சேஷாத்ரி,
1, தாதம் வீதி,
ஸ்ரீரங்கம் - 620006.

திரு. எச். ராமாராவ்,
3-4-207, பாக் லிங்கம் பல்லி,
காச்சிகூடா (அஞ்சல்)
ஹைதராபாத் (ஆ.பி.)

திரு. பி. விஜயேந்திரா,
நியூஸ் ஏஜண்ட்,
நகரி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. எம். பாண்டுரங்கம்,
பாண்டு ஜெனரல் ஸ்டோர்ஸ்,
நேரு பஜார்.
மதனபள்ளி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. ஏ. கே. சுப்ரமண்யம்,
நியூஸ் ஏஜெண்ட்,
பாகாலா (அஞ்சல்)

திரு. ஜி. ஸ்ரீநிவாச ஐயங்கார்,
965, வெங்கோப ராவ் லேன்,
ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமாள்
தஞ்சாவூர். [வீதி,

திரு. ஏ. ரங்காச்சார்யா,
12-5-5. எஸ்.வி.என். வீதி,
பாபையா பேட்டை,
சேமன்,
வரங்கல் (அஞ்சல்) ஆ.பி.

திரு. எச், என். இலட்சுமி
நரசிம்மைய்யா,
A 106, பெல் காலனி
ஜலஹல்லி (அஞ்சல்)
பெங்களூர்-13.

திரு. எம். பாலசுப்ரமண்யம்
நாகுல் கட்டா வீதி,
தாடிபத்திரி,
அனந்தபூர் மாவட்டம்.

திரு. எஸ். மெங்கதால்,
3, ரங்கநாதபுரம் தெரு,
அவனாசி.

திரு. டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி,
சிரௌதிகள்
74, ஏ, கிழக்கு முதல் தெருவு,
மன்னார்குடி-614001.

## எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. ஏ. முனுசாமி கௌடா,
ஓல்டு போஸ்ட் ஆபீஸ் ரோடு,
முலபாகல்,
கோலார் மாவட்டம்.

திரு. டி. சீனுவாஸசார்யா,
4, சௌந்தரம்மாள் கோயில் வீதி,
லட்சுமிபுரம்,
குரோம் பேட்டை, சென்னை-44.

திரு. வி. திருவேங்கடம்,
73, காளிமுத்து பிள்ளை லேன்,
திண்டுக்கல்.

திரு. எஸ். நாகராஜகுப்தா,
நியூஸ் ஏஜண்ட் & ஜெனரல்
மர்ச்சண்ட,
கிழக்கு பஸ் நிலையம்,
சித்தரதுர்க்கா.

திரு. ஏ. என. கிருஷ்ணமூர்த்தி,
157, கார்டன் ஏரியா,
ஷிமோகா.

திரு. பி. ராம்மோஹன மூர்த்தி,
28-88 ராமேஸ்வரம் அக்ரஹாரம்,
புரதொட்டூர்,
கடப்பை ஜில்லா.

திரு. என். பி. கே. பாய்,
9-901, சங்கர்ஷன் ஏஜன்ஸி,
ஆஜிபாய் ரோடு,
கொச்சின்-2.

திரு. வி. ஜே. ஜனார்தனன்,
11, புஜங்கராவ் வீதி,
சாலவன் பேட், வேலூர்.

திரு. ஆர். வெங்கடேசன்,
68, தெற்கு மாடவீதி,
திருவொற்றியூர், சென்னை-19.

திரு. என். வாசுதேவ பிரபு,
10-58, அமராவதி,
கொச்சின்-1.

திரு. என். வி. சாரி,
13. வடக்கு ஈஸ்வரன் கோயில்
ஈரோடு-1. [தெரு,

ஸ்ரீமதி. ஜி. ராஜேஸ்வரி,
32, பிராமணர் வீதி,
நாடுபேட், குடியாத்தம்.

திரு. ஏ. ஸ்ரீநிவாஸசார்யா,
ராயபர்த்தி அஞ்சல்,
வரங்கல் மாவட்டம், ஆ. பி.

திரு. இ. எஸ். வி. ஜகன்னாத ராவ்,
டெலிபோன் ஆபரேட்டர்,
எஸ். இ. இரயில்வே, பிலாய்-3.

திரு. கே. வி. சுப்ரமண்யம்,
குவார்ட்டர் நெ. 1-B.
ஸ்டீரிட் நெ. 5. செக்டர் 10,
பிலாய்-1.

திரு. வை. முகந்தராவ்,
பிளாக் நெ. 10-391,
மங்களவார் பேட், பூனா-1.

விஜயா ஏஜன்ஸீஸ்,
633, ஜே. பஜார்,
கரூர், திருச்சி மாவட்டம்.

திரு. கணபதிராம் & கோ.,
68/1, சங்கரன் கிணர் தெருவு,
விருதுநகர்—626001.

மேற்குறிப்பிட்ட இடங்களல்லாது, மற்றைய நகரங்களுக்கு 'ஸப்தகிரி' ஏஜெண்ட்டுகள் தேவை. விற்பனையில் 25% கமிஷன் வழங்கப்படும். மேலும், ஏஜெண்ட்டுகள் இல்லாத இடத்திலிருந்து வரும் குறைந்தபட்சம் 5 பிரதிகள் அல்லது அதற்கு மேற்பட்ட பத்திரிகை சரக்காணைகளுக்கும் (Bulk orders) மேற்படி கமிஷன் தரப்படும்.

வழி ஏவல் செய்; மறுத்தால் வடிவாளால் ஒறுத்து நான் நினைத்தது முடிப்பன்' என்று அவனை அச்சுறுத்துகின்றான் இராவணன். உயிர் வாழ விரும்பின் என் குறிப்பின் படி நிற்றி என்கின்றான், உலகத்து எல்லாச் சர்வாதிகாரிகளையும் போல. தன் பேச்சின் பயனின்மை உணர்ந்த மாரீசன் தான் என்ன செய்ய வேண்டும் என்று கேட்கின்றான். 'உன் தாயின் உயிர் கொண்டவனை நான் கொல்வேன்; நீ சீதையை வஞ்சித்து எடுத்து வருதலை எனக்காகச் செய்' என்கின்றான் இராவணன்.

மீண்டும் மாரீசன், புரவலன் தேவியை வலிமையாலன்றி வஞ்சித்து அடைதல் சிறுமை; அறத்தொடு படாது. அவனொடு அமர் செய்து உன் வீரத்தைக் காட்டுக என்கின்றான். அதுவும் பயனற்றுப் போகவே, என்ன மாயம் செய்வது என்று கேட்க 'பொன்னின் மானாகிப்புக்கு அப்பொன்னை மால் புணர்த்து' என்று அவன் கூற, அதன்படியே செய்ய முனைகின்றான். அப்பொழுது அம்மாரீசனின் மன நிலையைக் கம்பர் இவ்வாறு விளம்புகிறார். தன் சுற்றத்தை நினைந்து வருந்தினான்; வீரரை நினைந்து அச்சத்தால் மனம் மறுகிறான்; ஆழமான குழியில் உள்ள நீரில் நஞ்சு கலந்து விட்டால் அதிலுள்ள மீனின் நடுக்கம் போன்ற நடுக்க நிலை கொண்டான் மாரீசன். அவன் நிலை நினைக்கவும் அரிது; சொல்லுதல் எவ்வாறு என்கின்றார்.

வெஞ்சுற்ற நினைந்துகும்; வீரரைவே
றஞ்சுற்று மறுக்குறும்; ஆழ்குழிநீர்
நஞ்சுற்றுழி மீனின்நடுக் குறுவான்
நெஞ்சுற்ற தொர்பெற்றி நினைப்
பரிதால்.

(மாரீசன் வதை-765)

அவன் ஒப்பற்றதொரு மான் வடிவம் தாங்கிச் சீதையை நாடிப் போனான்.

இரண்டாவது நிலை: இப்போது மாரீசனை மான் வேடத்தில் காண்கின்றோம். அதன் தோற்ற வருணனை மிக அழகாகக் கம்பரால் அமைக்கப் பெற்றுள்ளது. இம்மாய மானினைக் கண்டு பிற மான்களெல்லாம் வேசியரை நாடும் காமுகரைப் போலத் தொடர்ந்தனவாம். மலர் கொய்ய வந்த சீதை இம்மானைக் கண்டாள்;

அது வஞ்சனைமான் என்று அறியாளாய் அதன்பால் ஆசை கொண்டாள். இராவணன் அழிய வேண்டும்; அழியாத அறம் நிலைக்க வேண்டும். அதனால்தான் அவள் உள்ளம் இப்படிச் சென்றது என்கின்றார் கம்பர். இராமனிடம் சென்று முறையிடுகின்றாள்: ஆணிப் பொன்னால் ஆகியது; ஆய் கதிரால் சேனில் சுடர்வது; திண்செவி கால் மாணிக்க மயத்து-ஒரு மானுளது அது காணத் தகும் என்கிறாள். இராமனும் மயங்குகின்றான். அம்மானவள் கூறிய சொற்கொடு அம்மான்மீது அன்புடையனாகின்றான்.

ஸ்ரீ உற்சவ ஆஞ்சநேயர்,
ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயில்,
திருப்பதி.

திரு. ஏ. கே. ராமானுஜம் - திருப்பதி.



இப்போது இளைய இலக்குவன் அண்ணனுக்குத் தெளிவுரை கூற முன் வருகின்றான். இது விரும்பத் தக்கதன்று; இயற்கைக்கு மாறானது; மாயம் ஆதல் வேண்டும். ஐயுறவு உண்டு இதில் என்கின்றான். இராமன் அவனைப்பார்த்து,

'மன்னுயிர்தாம் பல்லாயிரகோடி
பரந்துளவால்
இல்லாதனஇல்லை இளங்குமரா! (777)

என்று அமைதி கூறுகின்றான். பின் சீதையின் குறிப்பால் அவன் சென்று மானைக் கண்டான். இது நன்று என்றான். முன் கேட்டான். இப்போது கண்டான். கண்டும் அவன் தெளிவு பெறவில்லையா? அத்தகையவனைக் கடவுள் என்று ஏன் வணங்குகின்றீர் என்று கேட்கின்றார் தெலுங்கு கவி வேமனா. ஆனால் கம்பன் இக்கேள்வி வரும் என்று எதிர் பார்த்தவன் போன்று அதற்கு விடை கூறுவது சிறப்பாக அமைகின்றது.

திருமால் பாற்கடலில் பள்ளி கொள்ளுதலை விட்டு நீங்கி இவ்வுலகிற்கு வந்து பிறந்தது ஏன்? அது தேவர் செய்த பாக்கியத்தால் ஆகும். அது வீண் போகுமா? அவன் அரக்கரை அழிக்க இலங்கை செல்ல வேண்டாமா? அதனால்தான் இது நிகழ்ந்தது என்கிறார்.

சேக்கையின் அரவின் நீங்கிப் பிறந்
தது தேவர்செய்த
பாக்கிய முடைமை அன்றோ அன்னது
பழுது போமோ? (781)

இராமன் மானைப்பலவாறு புகழ்ந்து பேசியதும் அவன் தம்பி இலக்குவன் அதனை மறுத்துரைக்கின்றான். சீரியதன்று இது என நினைக்கின்றான். சிந்தையில் தெளிந்தவனாய்க் கனகமான் நாம் கண்டது என்றால் அதனை விடுத்து மீள்வதே செயத்தக்கது என்று தெளிவுடன் அண்ணனுக்கு உரைக்கின்றான். 'அது மாயமான் எனில் என் வாளியில் மடியட்டும், அரக்கர் மாள்வர்; நம் காரியம் கைகூடும். தூயமான் ஆனால் பற்றிக் கொள்ளுவோம். ஒரு செயல் செய்வது என்று துணிந்தபின் பகைவர் பலர் என்றும், அவர் மாயம் வல்லர் என்றும் எண்ணி நாம் முனிவர்க்கு உதவுவோம் என்று கொண்ட உறுதியை விடுதல் நகைக்கத் தக்கது' என்று இராமன் உறுதியுரைக்கின்றான்.

இங்கே வான்மீகத்தில் இல்லாததொரு புதுமையைப் புகுத்துகின்றான் கம்பன். மாயமானைத் தொடரும் பணியைத் தனக்கு நல்குமாறு இலக்குவன் பணிவோடு வேண்டுகின்றான். அப்போது பிராட்டி முன் வந்து,

'நாயக நீயே பற்றி நல்கலை போலு மென்னா'—என்று ஊடற் குறிப்புத் தோன்றத்தன் மெல்லிய இனிய சொற்களால் கூறி அழத்தொடங்குகின்றாள். அவள் ஊடல் தீர்ப்பான் இராமன் மானைத் தொடர்கின்றான். சிலப்பதிகாரம் போன்ற நூல்களில் பாண்டி மாதேவியின் ஊடல் விளைத்த பயனை நாம் அறிவோம். அத்தகையதொரு காட்சியைக் கம்பன் இங்கு இணைத்துக் காவியத்தை வளமாக்குகின்றான். இராவணனது காமமும் இராவணனது இராமனது காதலுணர்வும் கதை வளர்தற்குக் காரணமாகின்றன.

இளையோன் ஆலோசனையை மனத்திற் கொள்ளானாய்ச் சீதையின் கோபத்தை எண்ணிக்கொண்டு புன்னகையனாய் இராமபிரான் மானினைத் தொடர்ந்தான் என்கின்றான் கவிஞன். மான் மெல்ல மெல்ல மிதித்துச் சென்றது; நின்று வெறித்துப் பார்த்தது; அஞ்சி மேலே குதித்தது; செவியை நீட்டியும் பாதங்களை மார்போடு சேர்த்து வைத்தும் மேலே குதித்து ஓடியது. ஊதைக் காற்றும் உள்ளமும் போன்று—வாயு வேகம் மனோ வேகம் என்று சொல்லுவார்களே அது போன்று வெவ்வேறு கதிகளில் ஓடியது என்று வருணிக்கின்றான்: முன் உலகம் அளந்தவன் இன்று மானின்

(32-ம் பக்கம் பார்க்க)

# கீதை காட்டும் நல்வழி

திரு. பு. கே. நாராயணன், M.Sc,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.



## அத்தியாயம் – 9
## ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்
### பகுதி — 7

ஒருவனைத் தங்கச் சங்கிலியால் கட்டிப் போட்டாலும், இரும்புச் சங்கிலியால் கட்டிப் போட்டாலும், கட்டுப் பட்டிருக்கும் வரை அவன் கைதி தான். சங்கிலி தங்கத்தாலானது என்பதனால் அவன் கைதியாக இருக்க விரும்பமாட்டான். அதுபோல நாம் செய்யும் செயல்கள் நல்லவையானாலும், தீயவையானாலும் எப்படியும் நம்மைப் பந்தப்படுத்தவே செய்யும். நல்ல செயல் நல்ல விளைவுகளையும், தீய செயல்கள் தீய விளைவுகளையும் தரும். பிறகு அந்த விளைவுகளை அனுபவிப்பதற்காக மீண்டும் கர்மங்களைச் செய்ய வேண்டிவரும். பிறகு அந்தக் கர்மங்களுக்கு விளைவுகள் உண்டு. இப்படிக் கர்மச் சுழலில் அகப்பட்டுத் தவித்தால் எப்பொழுதுதான் முக்தி கிட்டும என்ற ஐயம் நம் மனதில் எழுவது இயற்கையே. பகவான் இதோ அந்தச் சந்தேகத்தைப் போக்கி அருளுகிறார்.

சுபா சுப பலைரேவம்
மோக்ஷ்யஸே கர்ம பந்தனை:|
ஸன்யாஸ யோக யுக்தாத்மா
விமுக்தோ மாமுபைஷ்யஸி ||28||

''இவ்விதம் (அதாவது முந்திய சுலோகங்களில் சொல்லியவாறு) நன்மை தீமைகளைப் பயக்கின்ற வினைத் தளைகளினின்று விடுபடுவாய். சந்நியாச யோகத்தில் உறுதி கொண்டவனாய் வினையினின்று விடுபட்டு என்னை அடைவாய்''.

யான், எனது என்ற செருக்குஅற்ற பெரியோர்கள் உலகில் உடல் தாங்கி உயிர் வாழ்ந்திருந்தாலும், அவர்கள் செய்யும் செயல்கள் அவர்களை சிறிதும் பந்தத்திற்கு உள்ளாக்குவதில்லை. அத்தகைய மகான்களை ஜீவன் முக்தர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். சாதாரண மக்களின் பார்வையில் அவர்கள் நம்மைப் போலவே செயல் படுவதாகத் தோன்றினாலும், அவர்களது நோக்கில் அனைத்துச் செயல்களையும் அவர்கள் இறைவனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டுப் பற்றற்றுப் பணி புரிகின்றனர்.

ஒரு முறை வியாசர் யமுனை நதிக் கரையில் நடந்து சென்று கொண்டிருந்தார். அப்பொழுது எதிர்த்திசையில் கோபியர் பலர் வந்தனர். அவர்களுக்கு யமுனையைக் கடந்து அக் கரை செல்ல வேண்டியிருந்தது. அங்கே ஓடக்காரனைக் காணோம். ஓடமும் காணப்படவில்லை. வியாசரிடம் சென்று, ''பெரியோய்! எங்களுக்கு யமுனையைக் கடந்தாக வேண்டியிருக்கிறது. ஏதாவது வழி சொல்லுங்கள்'' என்று வேண்டிக் கொண்டனர். அவரும் சரியென்றார். உடனே அவர், ''நான் உங்களுக்கு யமுனையைக் கடக்க வழி சொல்வது இருக்கட்டும். எனக்கு இப்போது மிகவும் பசியாக இருக்கிறது. உங்களிடம் இருக்கும் உணவுப் பொருள்களைக் கொடுங்கள்'' என்று வேண்டினார். அவர்களும் சரியென்று தங்களிடமிருந்த பால், வெண்ணெய், பாலேடு போன்றவற்றை அவருக்கு அளித்தனர். அவரும் அதை வாங்கித் திருப்தியாக உண்டார். பின்னர் அவர்களை அழைத்துக் கொண்டு நதிக்கரைக்குச் சென்று, ''யமுனா தேவி! நான் இன்று உபவாசம் இருப்பது உண்மையானால் எங்களுக்கு வழி விடுவாயாக' என்று வேண்டினார். என்ன ஆச்சரியம்! யமுனையும் வழிவிட்டது. அவர்கள் ஆற்றைக் கடந்து அக்கரை சேர்ந்தனர். கோபியர்களுக்கோ அதைக் கண்டு ஒரே ஆச்சரியம் அடைந்து அவரை வியப்புடன் பார்த்தனர். அவர்களது உள்ளக் கிடக்கையைப் புரிந்து கொண்ட அவரும், ''என்ன! நான் பொய் சொல்வதாகக் கருதுகிறீர்களோ! இல்லை, இன்று நான் உபவாசம் தான் இருக்கிறேன். நீங்கள் தந்த அனைத்து உணவுப் பண்டங்களையும் பகவானுக்கு நான் மனப் பூர்வமாக நிவேதனம் செய்து விட்டேன். உண்மையில் அதை அவர்தான் உண்டார். நானல்ல. அதனால் தான் யமுனா நதியும் நமக்கு

## தங்கு வசதி விவரங்கள்

| காட்டேஜ் விவரங்கள் | கிடைக்கும் காட்டேஜ்களின் எண்ணிக்கை | நாள் ஒன்றிற்கு வசூலிக்கப்படும் வாடகை விவரங்கள் |
|---|---|---|
| **திருமலையில்** | | |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரா கஸ்ட் ஹவுஸ் | 30 | இரண்டு படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 16/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | 20 | மூன்று படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள காட்டேஜ் ஒன்றிற்குரூ. 20/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | 30 | மூன்று படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள காட்டேஜ் ஒன்றிற்குரூ. 15/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | | ஹீட்டர் ஒன்றுள்ள பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 9/-<br>ஹீட்டர் இல்லாத பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 7/- |
| வேங்கடாசல காட்டேஜஸ் | 16 | ,, |
| ஆழ்வார் நகர் காட்டேஜஸ் | 40 | ,, |
| வ்வேலி வ்யூ காட்டேஜஸ் | 9 | மூன்று படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்ட காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 16/- |
| நாராயணகிரி காட்டேஜஸ் | 12 | ,, |
| சங்கு மிட்டா காட்டேஜஸ் | 81 | இரண்டு கட்டில்களைக் கொண்ட காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 10/-<br>பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 5/- |
| சேஷாத்திரிநகர் காட்டேஜஸ் | 68 | ஹீட்டர் ஒன்றினைக் கொண்ட முழு காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 12/- |
| அஞ்சநாத்ரி நகர் காட்டேஜஸ் | 78 | ஹீட்டர் ஒன்றுடன் கூடிய காட்டேஜின் 'ஏ' பகுதிக்கு ரூ. 7/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜஸ் | 78 | ஹீட்டர் இல்லாத காட்டேஜின் 'பி' பகுதிக்கு ரூ. 5/- |
| **திருப்பதியில்** | | |
| தி. தி. தேவஸ்தானம் கஸ்ட் ஹவுஸ் | 18 | இரண்டு படுக்கைகளைக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 12/- |
| ஸ்ரீநிவாச சத்திரம் (மாடியில்) (மேசை நாற்காலிகளைக் கொண்ட அறைகள்) | 30 | இரண்டு படுக்கைகளைக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 12/- |
| ஸ்ரீநிவாசசத்திரம் (கீழ்ப் பகுதியில்) (மேசை நாற்காலி வசதிகளைக் கொண்டது) | 40 | நான்கு படுக்கைகளைக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 15/- |

**குறிப்பு:** மேசை, நாற்காலி போன்ற வசதிகள் இல்லாத சத்திரங்களில் தங்கும் அறைகள் யாத்திரிகர்களுக்கு இலவசமாக வழங்கப்படும்.

(ஒம்) பி. எஸ். ராஜகோபாலராஜு,
செயலாட்சித் தலைவர்.

வழிவிட்டது'' என்றார். உண்மையான பக்தி அத்தகையது.

'ஸன்யாஸ யோக புக்தாத்மா' என்ற பதம் இந்த சுலோகத்தில் வருகிறது. 'ஸன்யாஸ யோகத்தில் உள்ளத்தை இறுதியாக வைத்தவன்' என்பது இதன் பொருள். எது ஸந்யாஸம்? காவி உடை தரித்து ருத்திராட்சம் பூண்டு காட்டிற்குப் போய்க் குகையில் தியானம் செய்வதா சன்னியாசம்? இல்லை என்கிறார் பகவான். பிறகு சன்னியாசத்திற்குப் பகவான் மிக அழகிய விளக்கம் தருகிறார்.

काम्यानां कर्मणां न्यासं
संन्यासं कवयो विदुः ।

'பலனில் பற்று வைத்துச் செய்யப் படும் காமிய கருமங்களை விடுவது தான் ஸந்யாஸம் என்று பண்டிதர் புகல்கின்றனர்' கர்மத்தை விடுவது அல்ல, காமிய கர்மத்தை அதாவது செய்யும் செயல்களில் உள்ள பற்று தலைத்தான் விடவேண்டும். அது தான் ஸந்யாஸம். உலகை விட்டு எங்கும் ஓடிப்போக வேண்டியதில்லை. வீட்டிலுள்ள குடும்பத்தொல்லைகள் பொறுக்க முடியாது 'ஸந்நியாசியாகி விடுவேன்' என்று பயமுறுத்துபவர்கள் ஒருக்காலும் சன்னியாசியாகி விட முடியாது. உண்மை சந்நியாசம் மனத்தினில் தான் உள்ளது. நமது கடமைகளையெல்லாம் ஒழுங்காகச் செய்து கொண்டிருக்க வேண்டும். அதற்கிடையில் மனம் உலகப் பொருள்களைப்பற்றி நிற்காது சதா இறைவனது பாதாரவிந்தங்களில் லயித்து நிற்க வேண்டும். அவன் தான் 'ஸந்யாச யோக யுக்தாத்மா' வாகின்றான். அத்தகைய பெருமகன் தாமரையிலைத் தண்ணீர் போல ஜகத்தொடும் கூடி வாழ்ந்து ஜீவன் முக்த நிலையை அடைகிறான். பகவான் ரமணர், ஸ்ரீசுவாமி சிவானந்தர் போன்ற பெருமக்கள் உலகத்தைத் துறந்து காட்டுக் குகையில் சென்று தனி வாழ்வு வாழவில்லை. மாறாகத் தங்களது வாழ்நாள் முழுவதும் இடையறாது மக்கட் தொண்டாற்றி வந்தனர். உடலில் பல உபாதைகள் இருந்

தும், எழுந்து நடக்க முடியாத நிலையி லும் சுவாமி சிவானந்தர் வந்த பக்தர் களை உபசரித்தலிலும், உலகெங்கிலு முள்ள ஆயிரக் கணக்கான பக்தர்க ளது கடிதங்களுக்குப் பதில் அனுப்பு வதிலும், நூல்கள் இயற்றுவதிலும், ஆன்மீகப் பிரசாரத்தில் ஈடுபடுவது மாக இருந்தார். அத்தனை வேலைகள் செய்தாலும் அவற்றின் பலனில் சிறி தும் பற்றற்று இருந்தது தான் அவ ரது சிறப்பு ஆகும்.

இந்தப் பிறவியே நமது இறுதிப் பிறவியாக ஆவதற்கு நாம் செய்ய வேண்டியதுசெய்யும்செயல்கள் அனைத் தையும் பகவானுக்கு அர்ப்பணித்து விட்டு பற்றற்ற பணியில் நம்மை அர்ப் பணித்து விடுவது தான்.

இத்தகைய பக்தர்கள் என்னைவந்து அடைகிறார்கள் என்று பகவான் கூறி யதும் நமது மனத்தில் ஒரு ஐயம் தோன்றலாம். பக்தர்களை ஆட்கொள் ளும் பகவான், அவரிடம் பக்தி இல் லாத ஏனையோரை விட்டு விடுவாரோ என்பதுதான் அது. அப்படி அல்ல. மனிதர்களாகிய நமக்குத் தான் விருப் பும் வெறுப்பும். பகவானுக்கு அஃது அறவே இல்லை என்பதை அடுத்த சுலோகம் தெரிவிக்கிறது.

ஸமோ அஹம் ஸர்வ பூதேஷு
நமே த்வேஷ்யோ அஸ்தி ந ப்ரியஃ|
யே பஜந்தி து மாம் பக்த்யா
மயி தே தேஷு சாப்யஹம் ||29||

''நான் எல்லா உயிர்களிடத்தும் சமமாயிருக்கிறேன். எனக்குப் பகை வனுமில்லை. நண்பனுமில்லை. ஆனால் என்னைப் பக்தியோடு வணங்குகிறவர் கள் என்பால் உளர். நானும் அவர் பால் உள்ளேன்''

அனைத்துயிர்களிடத்தும் சமமாக இருப்பது, அனைத்துயிர்களை யும் சமமாக ஆட்கொள்வதுவே ஆண் டவனின் சிறப்பு அம்சமாகும். இவன் என் பக்தன். எனவே எனது அன்புக் குப் பாத்திரமானவன். இவன் என் விரோதி. எனவே என் அன்புக்குப் பாத்திரமாக மாட்டான்' என் றெல்லாம் பாகுபாடும் வேறுபாடும் பாராட்டுவதைச் சாதாரண மனிதர்க ளிடம் தான் நாம் காணமுடியுமே ஒழிய பகவான் இதற்கெல்லாம் அப் பாற்பட்டவர். தன்னை அணைக்கும் குழந்தையை ஒரு கையாலும், அடிக் கும் குழந்தையை மறு கையாலும் அன்புடன் அரவணைத்துக் கொள்ளும் தாயைப் போல, பகவான் தம்மிடம் விருப்புள்ளோனையும், வெறுப்புள் ளோனையும் ஒரேபாங்கில் நேசிக்கிறார். அனைத்தும் அவர் படைத்தவைதானே. தானே படைத்தவற்றிடம் அவருக்கு வெறுப்பு இருக்க நியாயம் இல்லையல் லவா!

நல்லது கெட்டது என்ற வேறுபாடு பாராட்டாது சூரியவெளிச்சம்எல்லாப் பொருள்களின் மீதும் சமமாகப் படிகி றது. அந்த வெளிச்சத்தை ஏற்பது அந்தந்தப் பொருள்களின் இயல்பைப் பொறுத்ததாகும். கரு மணல், வெண் மணல், கண்ணாடி இவை யாவும் ஒரே பொருளின் வெவ்வேறு தோற்றங்கள். இவற்றின் மீது சூரிய வெளிச்சம் ஒரே விதமாகத் தான் விழுகிறது. ஆனால் சூரிய ஒளியைப் பிரதிபலிப்பதில் அவற்றிற்கிடையே பெருத்த வேறு பாடு உள்ளது. கண்ணாடி சூரிய ஒளி யை மிக அழகாகப் பிரதிபலிக்கிறது. கருமணலோ அதற்கு நேர் மாறாக விளங்குகிறது. இரண்டுக்கும் இடைப் பட்டதாக வெண்மணல் திகழ்கிறது. சூரியன் ஒன்றுதான். அதில் எந்தவித மாற்றமும் இல்லை. வேறுபாடெல் லாம் அதைப் பிரதிபலிக்கும் பொருள் களிடம் தான் உள்ளது.

ஈசுவரன் ஒருவர் தான். அவரது அருளும் அனைவருக்கும் உரித்ததுதான் இருப்பினும் நம்மவரது மன பரிபாகத் திற்கேற்ப அந்த அருளைப் பெறும் பாங்கு நம்மிடம் மாறுபடுகிறது. நமது உடலின் அவயவங்களான கால் கைகளைக் காட்டிலும் அவர் நமக்கு மிக அருகில் உள்ளார். இருந்தாலும் ஆணவம், அஹங்காரம் மிகுந்த மனி தன் தனக்கும் இறைவனுக்கும் இடை யே பெரும் தடைகளை உண்டு பண்ணிக் கொள்கிறான். இறைவன் எங்கோ தொலைவில் சுவர்க்கத்தில் சிம்மாசனத் தில் இருப்பதாகக் கற்பனை செய்து கொள்கிறான். ஆனால் மனமெனும் தடையைப் பூரணமாக அகற்றியவ னே 'தானே இறைவன்' என்ற உய ரிய அத்வைத நிலையில் இருந்து பேரின் பத்தை அனுபவிக்கிறான்.

இறைவனை நெருப்புடன் ஒப்பிட லாம். நெருப்பிற்கு அருகாமையில் வருவோர்களது குளிரை அது போக்கு கிறது. அதனின்று தொலைவில் இருப் போர்களது குளிரை அது போக்கு வதில்லை. அதுபோல் பகவானையே நினைந்து சதா வழிபடும் பக்தர்கள்

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறை வேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்க லாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுரு வம் பதித்த சுமார் 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.

பகவானுக்கு மிக அருகில் இருப்பவர்களாகின்றார்கள். அவர்களது துக்கங்கள் யாவும் பகவானுடைய அருளினால் சூரியனைக் கண்ட பனி போல் அகலுகின்றன. பக்தர்களது குறைகள் போவது பகவான் அவர்கள் மீது கொண்ட பற்றினாலோ, பாசத்தினாலோ அல்லது அன்பினாலோ அல்ல. பானையிலும், கண்ணாடியிலும் ஒரே மாதிரி சூரிய ஒளி விழுந்தாலும், ஒளியைக் கண்ணாடி பிரதிபலிக்கிறது, பானையோ பிரதிபலிப்பதில்லை. அது போல மனத்துக் கண் மாசு அறவே அற்றவர்களிடம் இறைவனது சாந்நித்யம் தானாகவே வெளிப்படுகிறது. மனத்தினில் குறை உள்ளவர்களிடம் அது வெளிப்படுவதில்லை. இதைத்தான் பக்தர் ஒருவர் அழகாகத் தெரிவிக்கிறார்.

**விறகில் தீயினன் பாலில் படுநெய் போல்**
**மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்**
**உறவு கோல் நட்டு உணர்வு கயிற்றினால்**
**முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே**

கண்ணாடி தன் ஒளியைப் பிரதிபலிக்கிறது என்பதால் அதனிடம் விருப்போ, பானை பிரதிபலிப்பதில்லை என்பதால் அதனிடம் வெறுப்போ சூரியனுக்குக் கிடையாது. அதைப் போல தன்னை வழிபடும் பக்தனிடம் விருப்போ, வெறுக்கும் நாஸ்திகனிடம் வெறுப்போ பகவானுக்குக் கிடையாது.

பக்தியின் சிறப்பு எத்தகையது என்பதைப் பகவான் மேலும் விளக்குகிறார்.

> அபி சேத்ஸுதுராசாரோ
> பஜதே மாமனன்ய பாக்|
> சாதுரேவ ஸ மந்தவ்யஃ
> ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸஃ ||30||

''மிகவும் தீயவன் என்று கருதப்படுவோனும் வேறு ஒன்றையும் எண்ணாது என்னை வழிபடுவானானால், அவன் சாது என்றே கருதப்பட வேண்டும். ஏனெனில் அவன் நன்கு தீர்மானம் செய்தவன் ஆகிறான்.''

நிரந்தர அயோக்கியன், நிரந்தர பாபி என்ற பேச்சுக்கே ஹிந்து மதத்தில் இடம் கிடையாது. அது நம்மையெல்லாம் 'அம்ருதஸ்ய புத்ரா.'-'ஹே அமிருதத்தின் செல்வர்கள்' என்று அன்புடன் அழைக்கிறது. பாபிகள் என்று ஒரு தனி வர்க்கம் கிடையாது. அறியாமையின் காரணமாகவே மனிதன் பாபம் அல்லது தவறு செய்கிறான். தான் செய்வது தவறு என்பதை உணர்ந்ததும் அவன் திருந்தியவனாகிறான். 'திருந்திய வாழ்வு மருந்தினும் இனிது' என்பதன்றோ நாமறிந்த பழமொழி.

எத்தகைய பாபிகளும், துராத்மாக்களும் கூட மனந்திருந்தி வேறு எதிலும் சிந்தை செல்லாது பகவானையே பூஜிப்பார்களாகில் அவர்கள் சான்றோர்கள் ஆகி விடுகிறார்கள் என்று பகவான் மொழிகிறார். கண்டதையெல்லாம் வேட்டையாடி வாழ்ந்த கொடூர மனம் படைத்த கொள்ளைக்காரன் ரத்னாகரன் நாரதரின் அருளால் மனம் திருந்தி மகரிஷி வால்மீகியாக மாறியமைந்தான். இன்னும் இதைப் போல எண்ணற்ற உதாரணங்களை எடுத்துக் காட்டலாம். மேரி மாக்டலீன் என்னும் பெண்மணி மிகவும் நடத்தை கெட்டவள் என்று சமூகமே அவளைப் பழித் தொதுக்கிய தருணத்தில் ஏசுநாதர் அவளை வந்து ஆட்கொண்டார். அவரருளால் அவள் மிகச் சிறந்த பக்தையாக மாறியமைந்தாள்.

விளக்கைக் கொண்டு செல்லுகையில் அறையைக் கவ்வியிருந்த இருள் தானே விலகி அங்கே ஒளி பரவுவது போன்று இறைவனிடம் பக்தி ஏற்படுகையில் ஒருவனது மனத்தினில் எத்தகைய பாப எண்ணங்களும் இருக்கமுடியாது. வெளிச்சமுள்ள வீட்டினுள் திருடன் நுழைய மாட்டான். அது போல பகவானிடம் பக்தியுள்ள மனத்தினில் கெட்ட எண்ணங்கள் நுழைய மாட்டா. எனவே பாபி ஒருவன் 'ஐயோ! நான் இவ்வளவு பாபம் செய்திருக்கிறேனே! எனக்குக் கதி மோட்சம் உண்டா?' என்று கலங்கத் தேவையில்லை. மனம் திருந்தி பகவானை வழிபட்டால் அவனும் இறைவனையடையலாம் என்று பகவான் இந்த சுலோகத்தில் நமக்கு உறுதி தருகிறார்.

(தொடரும்)

## அறிவிப்பு

தி. தி. தேவஸ்தான மேலாண்மைக்குட்பட்ட கோயில்களின் புதுப்பித்தல் மற்றும் பழுது பார்த்தல் பணிகளுக்காக, தி. தி. தேவஸ்தானத்திற்கு வழங்கப்படும் நன்கொடைகளுக்கு, 1961-ஆம் ஆண்டு வருமான வரிச் சட்டம் பிரிவு 80 ஜி (2) (b)-யின்கீழ், வருமான வரி விலக்களிக்கப்படும்.

  

சமயப் பணிகளுக்கல்லாத தர்ம காரியங்களுக்குமட்டுமென தி.தி. தேவஸ்தானத்திற்கு வழங்கப்படும் நன்கொடைகளுக்கு, 1961-ஆம் ஆண்டு வருமான வரிச் சட்டம், பிரிவு 80 ஜி-யின்கீழ், 31-7-1978வரை வருமான வரி விலக்களிப்படும்.

செயலாட்சித் தலைவர்
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

# அனுமன் கதை



## 17. வந்து தோன்றினன்!

கூற்றமும் கட்புலம் புதைப்பக்
கோத்தெழு
தோற்றமும் இராவணி துணிபும்
நோக்குறு
மேற்றிசை வாயிலை விட்டு வெங்கடும்
காற்றென அனுகினன் கடிதின்
வந்தரோ.

*(34, நாகபாசப் படலம், யுத்த காண்டம்.)*

வீரனுகிய அனுமனுடன் போர் புரிதலைக் கும்பகருணன் பெரும்பேருகக் கருதிவிட்டான். எனவே, அனுமனை நோக்கி, "வீரனே! உன்னுடன் போர் புரிதலையே உண்மையான - வலிமையான - சரிக்குச் சரியான போராகக் கருதுகின்றேன். இதற்கு முன்பு ஒரு முறை என்னுடன் நிகழ்த்திய போரை நீயே இடையில் நிறுத்தி விட்டாய். மீண்டும் நீ என்னுடன் போர் புரிவாயானுல், நீ சொல்லும் முறைப்படியே போர் புரிய நான் சித்தமாயிருக்கின்றேன்!" என்று கூறி அனுமனைப் போருக்கழைத்தான்.

அனுமன் வாக்குத் தவருதவனல்லவா! முன்பு ஒரு முறை கும்பகருணனுடன் போர்புரியும் போது மலையொன்றைப் பிடுங்கி அனுமன் கும்பகருணன் மேல் வீசியெறிந்தான். அம் மலையைக் கும்பகருணன் எதிர்த்துத் தாங்கித் தளராமல் வீரம் காட்டிவிட்டால் மீண்டும் அவனுடன் போரே புரிவதில்லை யென்று அப்போது அனுமன்வாக்குத் தந்தான். அனுமன் எறிந்த மலையைக் கும்பகருணன் அப்போது தள்ளிவிட்டான். அப்போது அனுமன், "இனி உன்னுடன் போர் செய்யேன்!" எனக்கூறி அப்பாற் சென்று விட்டான் என்ற செய்தியை நாம் முன்பே அறிந்திருக்கிறேம்.

அப்படியிருக்க, சொன்ன சொல்லைக் காப்பாற்றுமல் மீண்டும் அனுமன் கும்பகருணனுடன் போர் புரிந்தால் உலகம் அனுமனை உண்மையாளன் என உரைக்குமா? எனவேதான் கும்பகருணன் வேண்டுகோள் விடுத்தும், அவனுடன் போர் புரியாது தன் வாக்கைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அனுமன் அப்பால் சென்று விட்டான்.

பின்னர், கும்பகருணன் சுக்ரீவனுடன் போர் புரியத் தொடங்கினன். அப்போரில் கும்பகருணனுக்காற்ருது சுக்ரீவன் உணர்வு நீங்கப் பெற்றுன். உணர்விழந்த சுக்ரீவனைத் தூக்கிக் கொண்டு கும்பகருணன் ஊருக்குள் செல்லத் தொடங்கினன். அது கண்ட வானவர் வருந்தினர்; அரக்கர் அகம் மகிழ்ந்தனர்.

இந்நிலையில் அனுமனுக்குச் சத்திய சோதனை ஏற்பட்டுவிட்டது! கும்பகருணனுடன் போர் செய்து தன் அரசனுகிய சுக்ரீவனை மீட்பதா? அன்றிப் "போர் செய்யேன்!" எனக் கூறிய வாக்கைக் காப்பதா?

இருதலைக் கொள்ளி எறும்பு போல அனுமன் செய்வதறியாது திகைத்தான். இறுதியில், சத்தியமே பெரிதென எண்ணிய அனுமன் தன் கைகளைப் பிசைந்தவாறே கும்பகருணன் பின்னுலேயே சென்று கொண்டிருந்தான்.

கும்பகருணன் சுக்ரீவனைத் தூக்கிச் செல்லும் செய்தி இராமபிரான் செவிகளுக்கெட்டியது. அவ்வளவில் இராமபிரானுக்குச் சினம் பொங்கிற்று. கும்பகருணனுடன் போர் செய்து சுக்ரீவனை இராமபிரான் விடுவித்தார். போரில் கும்பகருணன் மாண்டான்.

இதற்கிடையில், மாயையில் வல்லவனுகிய மகோதரன் என்பான் தன்னுடைய மாயா ஜாலத்தால் சனகனைப் போன்ற உருவம் ஒன்றைச் சானகி முன்னர்க் கொண்டு வந்து நிறுத்தினன். அப்போது, தன் இச்சைக்கு இணங்குமாறு இராவணன் சீதையை வற்புறுத்திக் கொண்டிருந்தான். அவ்வேளையில் கும்பகருணன் இறந்த செய்தி இராவணன் செவிகளில் வீழ்ந்தது!

தன் தம்பி கும்பகருணன் இறந்துவிட்டான் என்ற செய்தியைக் கேட்டவுடன் இராவணனின் காமத்தீ சற்றுத் தணியலாயிற்று. எனவே, சீதையைச் சிறையில் காவலில் வைக்குமாறு சொல்லிவிட்டு இராவணன் அப்பால் சென்றுன்.

மகோதரன் கொண்டு வந்து நிறுத்திய சனகன் அரக்கர்களின் மாயையால் தோன்றும் தோற்றமே என்பதைத் திரிசடை சீதைக்கு விளக்

திரு. மா. சிதாராமன், M.A., BEd.,
பெருங்கட்டூர்.




திருமலை திருப்பதி தேவஸ்தான

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்)கட்டணம் ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ. | 25 |
| தோமாலை ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |
| அர்ச்சனை (ஸஹஸ்ரநாமம் அஷ்டோத்தரம்)பிறகு தரிசனம் | ,, | 4 |
| ஏகாந்த ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| பூலங்கி ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| திருமஞ்சனம் ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமந்த்ரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கம்பூராக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ,, | 2000 |
| திருப்பாவாடை | ,, | 4000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2000 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ. | 63 |
| வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

### பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| தத்யோதனம் | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 450 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 225 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்துளை | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கற்பூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.

மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.

கிறாள். மாயா சனகன் வரலாற்றைக் கேட்டுணர்ந்த சிதை தெளிவு பெற்றாள்.

தம்பியின் பிரிவால் வருந்திய இராவணன் பகைவரைக் கொன்றொழிக்கப் போருக்குப் புறப்படச் சித்தமானான். அப்போது, அதிகாயன் என்பவன் எழுந்து நின்று பகைவர்களைக்கொன்று வருவதாகக் கூறி விடை கேட்டான். இராவணனுக்குத் தாந்ய மாலினீ என்ற மனைவியிடம் பிறந்தவன் அதிகாயன். இராவணன் அதிகாயனைப் போருக்கு அனுப்பி வைத்தான்.

அதிகாயனை அழித்து வருமாறு இராமபிரான் தன் தம்பியாகிய இலக்குவனைப் பெருஞ்சேனையுடன் அனுப்பி வைத்தார். இருவருக்கும் நிகழ்ந்த போரில் வீரர் பலர் மாண்டனர். அரக்கர் படைகளையெல்லாம் இலக்குவன் போரில் அழித்துக் கொண்டிருந்தான்.

அனுமன் இலக்குவனுக்கு உதவியாக இருந்து வந்தான். அரக்கர் அனைவரும் போரில் மடிந்து கொண்டிருக்கிற செய்தியை இராவணன் கேள்விப்பட்டான். மதம்மிக்க யானைப் படைகள் பலவற்றைப் போர்க் களத்துக்கு அனுப்பி வைத்தான்.

களம் நோக்கி வரும் யானைகளை அனுமன் கண்டான். 'வீரச் செயல் ஒன்று செய்வேன்!' என்று தன் மனத்துள் எண்ணிக் கொண்டான். மதங் கொண்ட யானையைப் போன்றவனும், நரசிங்க மூர்த்தியை யொத்த வலிமையை யுடையவனும், வீரக்கழலை யணிந்தவனுமாகிய அனுமான் இராமனைத் தன் மனத்துள் எண்ணித் துதித்துக் கொண்டான். போர் புரிவதற்காக ஆர்ப்பரித்து நின்றான். அவன் கண்களில் அனல் பறந்தது. அருகில் இருந்த வலிய மரம் ஒன்றைப் போர் செய்தற்காகப் பிடுங்கிக் கொண்டான்.

அம்மரத்தினால் யானைப் படைகளை நையப் புடைத்தான். அதனால் மத யானைகள் பல திரள் திரளாகச் சென்று உயிர் நீத்தன. தரும வடிவினனான அனுமன் யானைப் படைகளைக் கொன்று குவித்த அற்புதத்தை என்னென்று இயம்புவது!

அனுமன் தன் கால்களால் மிதித்து யானைகள் பலவற்றை யழித்தான்; இடறுகின்ற நடையினால் பலவற்றைப் பலி வாங்கினான்; காலால் பலவற்றையும், வாலால் பலவற்றையும், வாலின் நுனியினால் பலவற்றையும், குதிப்பால் பலவற்றையும் கொன்று குவித்தான்.

மேலும் மேலும் சினங்கொண்ட அனுமன் யானைகள் சிலவற்றை இரண்டு கூறுகப் பிளந்து போட்டான்; சிலவற்றை மூங்கில் போல் முறித்துப் போட்டான்; சிலவற்றின் தோலை யுரித்தான்: சிலவற்றின் தந்தங்களை ஒடித்துப் போட்டான்; சிலவற்றைக் கடலில் எறிந்தான்; சிலவற்றைப் பூமியில் தள்ளிக் காலால் அரைத்தான். சிலவற்றின் குடலைப் பறித்தான். சிவபெருமான் முன்பொரு காலத்தில் தன் மேல் கோபித்து வந்த யானைகளை அழித்துக் கொன்றது போல, அனுமனும் நொடிப் பொழுதுக்குள்ளே ஆயிரக்கணக்கான யானைகளைக் கொன்று குவித்தான். அப்போது இளைய பெருமாளாகிய இலக்குவன் தன் பக்கத்தில் இருந்த யானைகள் சிலவற்றைத் தன் கொடிய அம்புகளால் கொன்று குவித்தான். இது கண்ட திக்குப்பாலகர்கள் மிக்க அச்சங் கொண்டு நிலைகெட்டு ஓடலாயினர்.

இவ்வாறு எல்லாத் திக்குகளிலும் யானைப் படைகள் அழிந்து குவியல் குவியலாய்க் காணப்பட்டன. அரக்கர்கள் பலரும் அனுமனால் அழிந்தனர். இந்நிலையில் அரக்கர் தலைவனை தேவாந்தகன் என்பான் சினங்கொண்டு அனுமன் உடலினுள் கொடிய அம்புகள் பலவற்றைச் செலுத்திக் கடலும் அதிரும்படி இடிபோலச் சிரித்து ஆர்ப்பரித்தான்.

தேவாந்தகனின் உயிரைப் போக்குதற்காக அனுமன் அப்போது பெரிய மரம் ஒன்றைப் பிடுங்கி எறிந்தான். தன் அம்பொன்றால் தேவாந்தகன்



## என் ரதம் உன் மனோரதமே!

திரு. எ. தியாகராஜன், சிதம்பரம்-1.

இனிமையிலும் இனிப்பாயும்
கொடுமையிலும் கடுப்பாயும்
இனியென்ன என்றுமின்றி
ஏதும் புரியாதும்
கடிதே செல்கின்ற
காசினியின் ஓட்டத்தில்
முடிபு தானும்
பிறப்பும் தனக்காயும்
சாக்காட்டின் சரித்திரமே
சாதனையின் சித்திரமாய்
பூக்காட்டின் பூக்களெல்லாம்
பூமியதன் புண்ணியமாய்
மிதந்துவரும் கீதமெலாம்
மீகாமன் அழைப்பாயும்
போராட்ட மத்தியிலே
போந்து தெளிவீந்த
காரோட்டி, கார்மேகா
என்ரதம் உன் மனோரதமே.

அம்மரத்தைப் பிளந்தான். எனவே, அனுமன் பெரிய மலையொன்றைப் பிடுங்கி வந்து தேவாந்தகன் மேல் எறிந்தான். அம்மலையினையும் தேவாந்தகன் தன் அம்பினுல் பொடிப் பொடியாக்கினுன். இதனைக் கண்டு சினந்த அனுமன் பாய்ந்து வரும் பருந்தைப் போன்று சென்று தேவாந்தகன் கையிலிருந்த வில்லைப் பறித்து முறித்துப் போட்டான்.

பின், தோமரம் என்னும் படையைத் தேவாந்தகன் அனுமன்மேல் எறிந்தான். அனுமன் அத்தோமரத்தைத் தன் கையால் பற்றித்தேவாந்தகனது தேரையும் சாரதியையும் மண்ணிற் சாய்த்தான். இது கண்டு சினந்த தேவாந்தகன் சூலம் ஒன்றைத் தன் கையில் ஏந்தினுன். நொடிப் பொழுதில் அனுமன் தேவாந்தகன் மேல் பாய்ந்து அவன் கன்னத்தில் குத்தித் தலையை மடித்து அவன் உயிரையும் குடித்தான்.

ஸ்ரீ லக்ஷ்மி நாராயண மூர்த்தி, கபிலேஸ்வரர் கோயில்-திருப்பதி.



தன் உடன் பிறப்பாகிய தேவாந்தகன் தன் கண் முன்னுலேயே மடிவதை அதிகாயன் கண்டான். மேருமலை போன்ற அனுமனுடன் போர்புரிய ஆத்திரத்துடன் அதிகாயன் அனுமன் முன்னே தோன்றினுன். கோபமிகுதியால் அனுமனுடன் பலவாறு வீர வாதம் புரிந்தான்.

"ஏ குரங்கே! முன்பு என் தம்பியாகிய அட்சகுமாரனை நிலத்தில் போட்டுத் தேய்த்துக் கொன்ருய்! அப்போது நீ கடலைத் தாண்டி உயிர் பிழைத்துக் கொண்டாய்! இப்போது எனது மற்ருெரு தம்பியான தேவாந்தகனின் உயிரைக் குடித்தாய்! பயமின்றி என் எதிரிலும் நிற்கின்ருய்! உனக்கு இன்று முடிவு நெருங்கி விட்டது. எனவேதான் நீ என் அருகிலேயே நிற்கின்ருய்! நீ எங்களுக்குச் செய்த தீங்குகள் ஒன்ரு! இரண்டா? எனவே, இன்று உன்னையும் இலக்குவனையும் எனது அம்பு மழையால் கொல்லாது மீளேன்! இது உறுதி!''

இவ்வாறு வீரமொழி புகன்ற அதிகாயனை நோக்கி அனுமன் கூறலானுன்:

''அரக்கனே! கொடிய சிங்கம் போன்றவனுன இலக்குவனையும் என்னையும் கொல்வதாகக் கூறுகின்ருய்! நீ மட்டும் போருக்கு வந்தால் போதாது. உன்னுடன் துணையாக வருவதற்கு உன் உடன் பிறப்பாகிய திரிசிரன் என்பவனையும் அழைத்துக் கொள். அவனையும் நான் தரையில் போட்டுத் தேய்க்கிறேன். என் சொல் பொய்க்காது. போ! போ! திரிசிரனையும் அழைத்து வா!''

இவ்வாறு வீரமொழி புகன்ற அனுமன் தன் கைகளைத் தட்டிப் பேரொலியுண்டாகுமாறு சிரித்தா இப்

பேரொலி கேட்ட மூன்று தலைகளை யுடைய திரிசிரனும் அனுமனைத் தாக்கு தற்கு அங்கே வந்து சேர்ந்தான்.

இராம தூதனாகிய அனுமன் அதி காயனையும் திரிசிரனையும் நோக்கி, "அற்பர்களே! நீங்களோ காமத்தில் அழுந்தியவர்கள். சிறிதும் கல்லாத வர்கள். நானோ காமம் சிறிதும் இல் லாதவன். கலைகள் பலவற்றையும் கதிரவனிடம் கற்றுணர்ந்தவன். நீங் களா என்னைக் கொல்லுதற்கு உரிய வர்கள்!'' என்று கூறிக் கொண்டே திரிசிரனுடைய தேர்மேல் பாய்ந் தான். திரிசிரனைக் கையில் எடுத்துப் பூமியின் மேல் தள்ளி, அரக்கர் குலத் துக்குப் பழியும் அழிவும் தோன்று மாறு அனுமன் அத் திரிசிரனை அரைத்துத் தேய்த்து அழித்தான்.

பின்னர், மேற்றிசை வாயிலில் போர் நடைபெறுவதறிந்து, வடதிசை வாயிலில் இருந்தும் நீங்கி அனுமன் அங்கே போனான்.

நொடிப் பொழுதில் தன் தம்பியை அழித்த அனுமனது வீரத்தை அதி காயன் தன் மனத்துக்குள்ளாகவே எண்ணி வியந்து கொண்டான். எதிரே நின்ற இலக்குவனைக் கொல்ல அதி காயன் சேனையுடன் இலக்குவனை நெருங்கினான். அங்கதன் தோள்மேல் அமர்ந்தபடியே அதிகாயனைப் பிரமாத் திரத்தால் இலக்குவன் கொன்றொழித் தான். இராவணனது மற்றொரு மகனா கிய நராந்தகனை அங்கதன் கொன் றான். நீலன் மத்தனையும், இடபன் வயமத்தனையும், சுக்ரீவன் கும்பனையும் அழித்தனர்.

சூலப்படையைக் கையில் ஏந்திய நிகும்பன் என்னும் அரக்கர் தலைவன் வானரத்தலைவனாகிய அங்கதனைக் கொல்ல முற்பட்டான். நிகும்பனால் அங்கதன் இறந்து போவான் என் பதை யுணர்ந்த அனுமன் விரைந்து நிகும்பன் மேல் பாய்ந்தான்.

நிகும்பனின் சூலப்படையை அனு மன் முறித்துப் போட்டான். நிகும் பனை அனுமன் தன் கையாலேயே அடித்துக்கொன்றான். இதனால் அரக் கர் சேனை சிதறுண்டது. அதிகாயன் முதலியோர் இறந்தது கேட்டு இராவ ணன் பெருந் துயரமடைந்து புலம்பி னான். அரக்க மாதர் வாயிலும் வயிற் றிலும் அடித்துக் கொண்டு அழுது புலம்பினர்.

இவற்றையெல்லாம் கேள்வியுற்றான் இந்திரசித்து. தன் தம்பி அதிகாயனைக் கொன்ற இலக்குவனைத் தவறாமல் கொல்லப் போவதாகச் சபதம் செய் தான். இராவணனிடம் விடைபெற்று இந்திரசித்து போருக்குப் புறப்பட் டான். இலக்குவனை நோக்கி இந்திர சித்து வருவதை அனுமன் கண்டு கொண்டான்.

இராம இலக்குவர்க்கு யாதொரு தீங்கும் ஏற்படக்கூடாது என்பதில் கண்ணும் கருத்துமாக இருப்பவன் அனுமன். முன்பொருகால், தான் இலங்கை சென்ற போது தன்னைப் பிரமபாசத்தால் கட்டி இழுத்துச் சென்ற இந்திரசித்துவின் வலிமையை அனுமன் நன்குணர்ந்திருந்தான். எனவே, இந்திரசித்துவின் தோற்றத் தையும் துணிச்சலையும் நன்குணர்ந்த அனுமன் இலங்கையில் தான் இருந்த மேற்குத் திக்கின் வாயிலை விட்டுக் கொடிய சூறாவளிக் காற்றுப் போல கடுகி வந்து இலக்குவன் இருப்பிடம் சேர்ந்தான்! இந்திரசித்துவினால் இலக் குவனுக்கு யாதொரு தீங்கும் ஏற்படா திருக்க அனுமன் அங்கு வந்து தோன் றினான்!

(தொடரும்)

மோகினி அவதாரத்தில் ஸ்ரீவேங்கடேஸ்வரர் — திருமலை பிரம்மோற்சவத்தின்போது



# செல்வம் - சங்கரர் நோக்கில்!

'நெய்வேலி நுனிப்புல்'

ஆதி சங்கரர் அனைத்தும் துறந்த ஒரு முனிவர். துறவிகளின் நெறி முறைகளை வகுத்துத் தந்த ஆதி ஆசாரியர் அவர். காசைச் சாடுகிற இடங்கள் அவர் கிரந்தங்களில் நிறைய உள்ளன. பணத்தாசை மனிதனை என்ன பாடெல்லாம் படுத்தி வைக்கிறது என்பதை வெகுக் கூரிய முறையில் எடுத்து இயம்புவதில் பகவத் பாதர் மிக வல்லவர்.

அறிவு மழுங்கிப் போவதற்கே இந்தப் பாழும் பணம் தான் காரணம். நல்ல, கூரிய அறிவாளியாக இருந்தவன் காசினால் மந்த புத்தி கொண்டவனாக மாறி விடுகிறான் என்பது ஆசாரியர் கொள்கை.

**தனேன மதபுத்தி: ஸ்யாந் -**
**மதேன ஸ்ம்ருதி நாஸனம் |**
**ஸ்ம்ருதி நாஸாத் புத்தி நாஸோ**
**புத்தி நாஸாத் ப்ரணஸ்யதி ||**

இந்த சுலோகம் ஆசாரியரின் சர்வ வேதாந்த சித்தாந்த சார சங்கிரகம் எனும் நூலில் 76-வது பாட்டு ஆகும். காசு ஆளையே அழித்து விடுகிறது என்னும் உண்மையினை வலியுறுத்தும் ஆசிரியர் இங்கு நாசம் என்ற சொல்லை நாலே அடியில் ஐந்து தடவைகள் கூறுகிறார். செல்வம் சேரச் சேர அறிவு மழுங்கும்; அறிவு மழுங்குதலால், நினைவு தப்புகிறது; நினைவு குன்றுவதால், அறிவு அடியோடு அழிகிறது; அறிவு அறவே அழிதலால், ஆளே அழிகிறான்.

பார்க்கப் போனால், இந்தப் பணம் என்பதே ஒரு தொல்லை தான். இது ஒரு காலும் இன்பத்திற்கு வழியல்ல. சிறுகச் சிறுகச் சேர்ப்பதே கஷ்டம். சேர்த்து விட்டால், காப்பாற்றியாக வேண்டும். அதுவும் ஒரு தொந்தரவு. நாலு பேருக்கு அள்ளி வழங்குதல் என்றால் கூட, யோசித்துப் பாத்திரம் அறிந்து செய்ய வேண்டும். செலவழிப்பதும் இலேசான காரியம் அல்ல. இவ்வாறாகப் பெரிய குடும்பஸ்தனை விட மிக அழகாக அடுக்கிக் கொண்டே போய்க் காசு ஒரு உபத்திரவம் தான் என ஆதி சங்கரர் முடிக்கிற சுலோகம் வருமாறு:

**ஆர்ஜனே ரக்ஷணே தானே**
**வ்யயே வா'பி ச வஸ்துத: |**
**து:நமேவ ஸதா ந்ருணும்**
**ந தனம் ஸுக ஸாதனம் ||**

இது, முந்திய சுலோகத்திற்கு நாலு இடம் முன்னால் வருவது, எப்போதுமே மனிதர்களுக்குப் பொருள் சுக சாதனம் அல்ல. உண்மையில் தொல்லை தான் காசினால்.

எனவே, பெயர் தான் பொருள் என்று உள்ளதே ஒழிய, பொருள் உண்மையில் பொருளற்றது என்று எப்போதும் எண்ணி வருமாறு, புத்தி புகட்டும் சுலோகம் பஜகோவிந்தத்தில் வரும் சுலோகம் 29.

**அர்த்தமனர்த்தம் பாவய நித்யம்**
**நாஸ்தி தத: ஸுகலேஸ: ஸத்யம் |**
**புத்ராதபி தனபாஜாம் பீதி:**
**ஸர்வத்ரைஷா விஹிதா ரீதி: ||**

ஸமஸ்கிருதத்திலும் செல்வம் - கருத்து என்ற இரண்டுக்கும் ஒரே சொல் 'அர்த்தம்' என்பது. பெயர் தான் அர்த்தமே ஒழிய, அதனால் விளைவது அனைத்தும் அனர்த்தம் தான் என்று நித்தியம் கருத வேண்டும். பணத்தினால் துளிக்கூட இன்பம் இல்லை-உண்மையாகவே தான்!

ஏனெனில் பணம் சேர்த்து வைத்தவர்கள் பெற்ற பிள்ளையினிடமிருந்தே அஞ்சுகிறார்கள். இவ்வாறு கூறும் ஆசாரியர், அடுத்து, எங்கே பார்த்தாலும் இந்த மாதிரி ஆகிவிட்டது என்றும் தெளிவாக்குகிறார். காசைச் சேர்த்து வைத்துக்கொண்டு, பெற்ற பிள்ளையினிடமே அஞ்சி வாழ்வது நாட்டு நடப்பாகப் போய்விட்டது. எனவே, காசு அழிவுக்குத் தான் வழி செய்வது! பஜகோவிந்தத்து முதல் பாடலே இந்த எச்சரிக்கை தானே?

**மூட ஜஹீஹி தனாகம த்ருஷ்ணும்**
**குரு ஸத்புத்திம் மனஸி**
**வித்ருஷ்ணும் |**
**யல்லபஸே நிஜ கர்மோபாத்தம்**
**வித்தம் தேன விநோதய சித்தம் ||**

பண வரவில் உள்ள ஆசையை விட்டொழி என்கிறது முதலடி. உள்ளத்தில் வீண் ஆசைகளை விடுத்து நல்லெண்ணத்தைப் பேணி வா. உனக்கு உள்ள வேலைக்கு என்ன கிட்டுகிறதோ, அதை வைத்துக் கொண்டு உளத் திருப்தி கொள்கிற வழியை பாரடா, மூடனே!

இந்தப் பாடலின் கருத்து ஒரளவு மாறுபட்டது. காசே கூடாது என்று சொல்லவில்லை. காசாசை கொண்டு பேயாய், நாயாய்ப் பரிதவிக்காதே. கிடைப்பதைக் கொண்டு, திருப்தி கொள். பொய்ப் பித்தலாட்டங்கள் செய்யாதே. நிஜமான வழியில் சம்பாதித்துச் சந்தோஷமாய் இரு; வேண்டாம் என்று சொல்லவில்லை.

ஆம், முன்னற் சொன்ன பேச்சே தான் இங்கும். பணம் சேரச் சேர அறிவு மழுங்கும் என்று கூறினார் அல்லவா? அப்படியாகாத வண்ணம், 'ஸத்புத்தி' (நல்லறிவு) கொண்டு, பணத்தை நல்ல வழியில் ஈட்டிப்பேணி வளர்க்கலாம் என்கிறார் இங்கு!

பொருள் ஆளையே கெடுக்கும் தன்மை வாய்ந்தது என்ற கருத்தைப் பகவத் பாதர் சர்வ வேதாந்த சித்தாந்த சார சங்கிர நூலில் திரும்பத் திரும்பக் கூறுவார். சுலோகம் 79 வருமாறு:

லோப: க்ரோதஸ் ச டம்பஸ் ச
மதோ மத்ஸர ஏவ ச |
வர்ததே வித்த ஸம்ப்ராப்த்யா
கதம் தச்சித்த ஶோதனம் ||

காமம் என்று தொடங்கிச் சாதாரணமாகக் குரோதம், மோகம், லோபம், மதம், மாத்சரியம் என மொத்தம் ஆறு கூடாத குணங்கள் கூறுவர். இங்கு ஆதி சங்கரர் பணம் சேரச் சேர, மனிதன் எப்படி அழிகிறான் என்பதைத் தெளிவாக்க, லோபம் (பேராசை), குரோதம் (வீண் சினம்), டம்பம் (டாம்பீகம் எனும் ஆடம்பரம்), மதம் (அறிவு மயக்கம்), மத்சரம் (காழ்ப் புணர்ச்சி)-ஆகியவை யாவும் வளர்கின்றன என்கிறார். எனவே உள்ளம் திருந்தி வருமா எங்கேயாவது?

பெரிய, பெரிய மேதாவிகள் எல்லாம், காசு சேரச் சேரக் கண் இழந்து, கவிழ்ந்த கதைகள் உண்டு. 73-ம் சுலோகம் இவ்வாறு கூறும்.

நல்லோர்கூடக் கெடலாம் காசு சேரச் சேர. பேராசை பெரு நஷ்டம் என்பர். பெரு நஷ்டம் என்பது வெறும் பொருள் நஷ்டத்தைக் கூறுவது அல்ல. ஆளே அழிவது தான் பெரு நஷ்டம்.

ஸதாமபி பதார்த்தஸ்ய
லாபால்லோப: ப்ரவர்ததே |
விவேகோ லுப்யதே லோபாத்
தஸ்மின் லுப்தே விநஸ்யதி ||

பொருள் வர வர, ஆசையும் பெருகுகிறது - நல்லோர்க்குக் கூட! நல்லது - தீயது என்ற பாகுபாடு (விவேக உணர்வு) போய் விடுகிறது. ஆளே போய் விடுகிறான் அழிந்து!

திரும்ப, இன்னொரு சுலோகம். நல்லவர்களுக்கு இந்தப் பணம் பண்ணும் தொல்லையையே விரித்துரைக்கிறது. காசுச் சேர்ந்துவிட்டால், பயமும் பற்றிக் கொள்கிறது. எங்கு நோக்கினும், எப்போதுமே ஒரு பயம் ஆளை அரித்துப் பிடுங்குகிறது.

ராக்ஞோ பயம் சோரபயம் ப்ரமாதாத்
பயம் ததா க்ஞாதிபயம் ச வஸ்துத:|
தனம் பயக்ரஸ்தமனர்த்த மூலம்
யத: ஸதாம் நைவ ஸுகாய கல்பதே ||

இது 71-ம் சுலோகம். பணக்காரர்களுக்கு எந்தப் பக்கம் திரும்பினாலும், குலை நடுக்கம் தான். அரசினிடம் பயம், எங்கே கொண்டு போய் விடுவார்களோ என்று. திருட்டுப் பயம், அலட்சியமாய் இருந்து கோட்டை விடுவோமோ என்று ஓர் அச்சம். உறவினர்களிடமே ஒரு பீதி. இவ்வாறாக, உண்மையில் பயமூட்டும் செல்வம் அழிவுக்குத் தான் ஆணிவேர். எனவே நல்லோர் இனிது வாழ வகை செய்வதில்லை!

இங்கே தீயோரைப் பற்றிப் பேச்சில்லை. தீயோர் தம் பழவினைக்குப் பரிதவிக்கட்டும். ஆனால், வீணில் நல்ல மனுஷ்யர்கள் எல்லாம் காசு சேர்த்துக் கஷ்டப் படுவானேன் என்பது தான் ஆதி சங்கரர்க்கு வருத்தம்.

அப்படியேனும் எதற்குச் சேர்த்துக் குவித்து அல்லற் படுகிறீர்கள் என்கிறார் பகவத் பாதர். ஏதோ ஒழுங்காக இருந்து, இட்ட பணியைச் செய்து, கிட்டிய காசைக் கொண்டு திருப்தியாகக் காலம் தள்ளலாமே! ☘

---

தெப்பத்தில் ஸ்ரீ கபிலேஸ்வரர்—திருப்பதி.



# ஸ்ரீ ராமன் கேட்ட வரம்

கோதண்ட ராமன் போர் முடித்தான். வெற்றி பெற்ற நிலையில், சீதாதேவியை அழைத்து வரச்செய்து, அனலிடை முழுகி எழ ஆணையிட்டான். கற்பின் நாயகி நெருப்பிடை முழுகி எழுந்தாள். அக்னி தேவன் சீதா-ராமனை மனதார வாழ்த்தினன்! தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர்.

இந்நிலையில்,

விண்ணுலகில் தெய்வநிலை பெற்றிருந்த தசரத மன்னன் தன் மைந்தனின் செயல் கண்டு மகிழ்ந்தான். ஸ்ரீ இராமபிரான் முன்பு தோன்றினன். அன்புச் செல்வனை அரவணைத்து ''மைந்தா! உன் செயல் கண்டு மகிழ்ந்தேன். இக்ஷ்வாகு வம்சத்தின் குல விளக்கே! உனக்கு வேண்டும் வரம் ஏதேனும் கூறுவாயாக!'' என்று கூறினன்.

உலகம் யாவையும் காத்து இரட்சிக்கும் பரம்பொருளான ஸ்ரீ இராமபிரானுக்கு வரம் வேண்டுமா? அவனே வரம் அளிப்பவனுயிற்றே!

நன்மையும் செல்வமும் நாளும்
நல்குமே
சென்மமும் மரணமும் இன்றித்
தீருமே
இம்மையே 'ராமா' என்ற இரண்
டெழுத்தினல்!

என்றவாறு,

பிறப்பிற்கும், இறப்பிற்கும் அப்பாற்பட்ட முழுமுதற் பொருளான அப்பெருமானுக்கு என்ன வரம் வேண்டும்?

ஸ்ரீ இராமபிரான் புன்முறுவல் பூத்தான். தந்தையை வணங்கினன். 'தந்தையே! தங்களைக் காண வேண்டும் என்று நெடு நாட்களாகத் தவம் கிடந்தேன். இன்று தங்களைக் காணும் பேறு பெற்றேன். இதனினும் சிறப்புடையது வேறு ஏது?' என்று கூறி நின்ருன்.

தசரதன் மைந்தனை மீண்டும் நோக்கினன் ''இராகவா! நீ எப்படியேனும் ஒரு வரம் கேட்டுத்தான் ஆக வேண்டும்'' என்னும் பொருள்பட,

'ஆயினும் உனக்கு அமைந்த தொன்று உரை' என அன்புக்கட்டளையிட்டான்.

சகலலோகங்களுக்கும் தலைவன் சிந்தித்தான். தெள்ளெனத் தெளிந்து நின்ற ஸ்ரீ ராமபிரான் சொல்லிலே தாய்ப் பாசமும், சகோதர பாசமும் பொங்கி வழிந்தன.

அன்று தசரத மன்னனல் மனைவியல்லள் என்று ஒதுக்கப்பட்ட கைகேயியைத் தாய் என்றும், 'மகனல்லன்' என்று ஒதுக்கப்பட்ட பரதனைச் சகோதரன் என்றும் கூறும்பேறு பெற விழைந்தான் இராகவன்.

தந்தையினல் ஒதுக்கப்பட்ட கைகேயியை எவ்வாறு தாய் என்று இயம்புவது? பரதனைத் தம்பி என்று எவ்வாறு கூப்பிடுவது?

அறத்தின் நாயகன் அதிக நேரம் யோசிக்க அவகாசம் அளிக்கவில்லை.

''அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'' என்ற ஆன்ருேர் மொழிக்கேற்ப—தெய்வ நிலையில் கைகேயியை அமர்த்தி—அதன் வழியாக பரதனின் உறவையும் வலுப்படுத்திக் கொண்டான் ரகுநாயகன்.

இதனை, வெகு அழகாக ஸ்ரீ ராமபிரான் தான் வேண்டும் வரமாக, தசரத மன்னனிடம் வேண்டிப் பெற்றதனை கம்பராமாயணத்தில் காண்கிருேம்.

'ஆயினும் உனக் கமைந்ததொன்
றுரையென அழகன்
தீயள் என்றுநீ துறந்த என் தெய்வ
மும் மகனும்
தாயும் தம்பியும் ஆம் வரந்தரு
கெனத் தாழ்ந்தான்
வாய்திறந்தெழுந் தார்த்தன வுல
கெலாம் வழுத்தி'

இவ்வாறு ஸ்ரீ ராமபிரான் தான் பெற்ற வரத்தின்மூலம் 'தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை' என்ற உயர்ந்த கொள்கையினை உலகிற்கு வழங்கியதனை எண்ணி அவன் வகுத்த வழி நின்று அவன் தாள் பணிவோமாக! 

திரு. கே. எம். ஜெயராமகிருஷ்ணன்,
குமரலிங்கம்.

தி. தி. தேவஸ்தானத்தின் சுமார் ரூ. 1 கோடி நிதி உதவியுடன் அண்மையில் திருப்பதி அருகே கட்டப்பட்டுள்ள கல்யாணி நீர்த்தேக்கம்.



# அத்தியூர் ஆழ்வார் ஆலயம்




காஞ்சியிலுள்ள வரதராஜர் ஆலயம் வரலாற்றுப் பெருமைவாய்ந்த வைண வப்பதிகளுள் ஒன்று. வைணவ மரபுப் படி கோயில் என்றால் திருவரங்கமும், திருமலை என்றால் திருப்பதியும், பெரு மாள் கோயில் என்றால் காஞ்சி வரத ராஜர் ஆலயமும் சிறப்புப் பெற்றவை யாகும்.

இக்கோயில் எப்பொழுது தோன் றியது என்பது குறித்து நமக்குத் திட்டவட்டமாகத் தெரிந்திலது. 'ஹஸ்திகிரி மாகாத்மியம்' என்னும் புராண நூல், புராண அடிப்படையில் இக்கோயிலைப் பற்றிக் குறிக்கிறது. இருப்பினும், முதலாழ்வார் மூவரில் ஒருவரான பூதத்தாழ்வார் இங்கு எழுந்தருளியுள்ள இறைவனை, 'அத்தி யூரான புள்ளையூர்வானி' (இயற்பா,


திரு. எஸ். ஹரிஹரன், எம்.ஏ.
திருநெல்வேலி–6.


இரண்டாவது திருவந்தாதி செய்யுட் கள் 95, 96) என்று குறிப்பிடு கிறார். கி. பி. 8-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரான திருமங்கை ஆழ்வார் 'வாழ் நறும் மாமணிவண்ணன்' (பெரிய திருமொழி 2-93) என்று குறிப்பிடுகிறார்.

தற்காலத்தில் விஷ்ணு காஞ்சி அல் லது சிறிய காஞ்சிபுரம் என்று அழைக் கப்படும் இடம் பண்டு அத்தியூர் என்ற பெயரால் விளங்கிற்று. வரதராஜர் கோயில் கல்வெட்டுக்களும் இறைவனை 'அத்தியூர் ஆழ்வார்' அல்லது 'திருவத்தியூர் ஆழ்வார்' என்றே குறிக் கின்றன.

இக்கோயில் வைணவ குரு ராமா னுஜர் காலத்திலும் அதற்குப் பின்ன ரும் பெரும் கீர்த்தி பெற்றது. ராமா னுஜரின் சமகாலத்தவர்களான கூரத் தாழ்வாரும், திருக்கச்சி நம்பியும் வரத ராஜனைப் போற்றியுள்ளனர். கூரத் தாழ்வாரின் 'வரதராஜஸ்தவம்', திருக்கச்சி நம்பியின் 'தேவராஜஸ் தவம்' குறிப்பிடத்தக்கவை. இந்நூல் களைப் பின்பற்றி பிற்காலத்தில் இது போன்ற நூல்கள் வெளிப்பட்டன. சர்வதந்த்ரஸ்வதந்திரரான வேதாந்த தேசிகர் 'வரதராஜ பஞ்சாஸத் ஸத்ய வ்ரத மாகாத்மியம்' என்று வட மொழியிலும், 'அடைக்கலப்பத்து' என்று தமிழிலுமாக இவ் இறைவனைப் புகழ்ந்துள்ளார். அப்பய்ய தீக்ஷிதரின் 'வரதராஜஸ்தவமும்' மணவாள மா முனியின் 'தேவராஜ மங்களமும்' நூலாசிரியர்கள் இவ்விறைவன்பால் கொண்டுள்ள பக்திப் பெருக்கை விவரிக்கின்றன.

## கல்வெட்டுக்கள்.

மேற்கூறிய ஆசாரியர்களின் நூல் கள், சமயச் சூழலில் இக்கோயில் விசித்த தனித்தன்மையைக் குறிக் கின்றன. ஆயினும் வரலாற்றுப்

போக்கில் இக்கோயிலின் பங்கு பற்றிக் குறிப்பிட வேண்டுமானால் அரசியல், பொருளாதார, சமூக மட்டத்திலும், நிர்வாகத் துறையிலும் இக்கோயிலின் பங்கு, அரசர்களும், குடிமக்களும் இக் கோயிலுடன் கொண்டுள்ள தொடர்புகள் போன்றவற்றை அறிய இக்கோயிலில் உள்ள கல்வெட்டுக்களே மூலச் சான்றுகளாக விளங்குகின்றன.

நானூறுக்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் இக்கோயிலில் உள்ளன. பெரும்பாலானவை தமிழ் மொழியிலும், சில கல்வெட்டுக்கள் சமஸ்கிருதம், தெலுங்கு, கன்னட மொழிகளிலும் உள்ளன. இங்குள்ள சோழர் காலக் கல்வெட்டுக்கள் அனைத்தும் 'கோயில் கணக்கரால்' கையொப்பமிடப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்க அம்சமாகும். கல்வெட்டுக்களில் இடம்பெறும் அனேக கோயில் கணக்கர்களில் இருவர் இறைவன் பெயரையே கொண்டுள்ளனர். 'திருவத்தியூர் பிரியன்', 'பேரருளானதாசன்' என்ற பெயர்களே அவை. இக்கோயிலில் உள்ள கல்வெட்டுக்களுள் மிகவும் தொன்மையானவை. கி. பி. 11-ஆம் நூற்றுண்டைச் சார்ந்தவையாகும். அனேகமாக இந்த நூற்றுண்டில்தான் இக்கோயில் திருத்தியமைக்கப்பட்டிருத்தல் வேண்டும்.

காஞ்சிமாநகர் கண்ட பல்வேறு அரசியல் கொந்தளிப்புகளையும், சூறாவளிகளையும் இக்கோயிலின் பல்வேறு குல மன்னர்களின் கல்வெட்டுக்கள் பிரதிபலிக்கின்றன. இக்கல்வெட்டுக்கள் பிற்காலச் சோழ மன்னர்கள் முதலாம் இராஜாதிராஜன் துவங்கி, மூன்றும் இராஜராஜன் ஈறாக பாண்டியமன்னர்கள் ஜடவர்மன் சுந்தரபாண்டியன், வீரபாண்டியன், மாறவர்மன் குலசேகரன், போசள மன்னர் மூன்றும் வல்லாளன் காகதீயமன்னர்கள் கணபதி, இரண்டாம் பிரதாபருத்ரன், தெலுங்குச் சோழ மன்னர்கள் விஜயகண்ட கோபாலன், வீரகண்டகோபாலன் காடவமன்னர் கோப்பெருஞ்சிங்க தேவன், சம்புவரைய மன்னன், ராஜநாராயணசம்புவரையன், சேரமன்னன் ரவிவர்மன் குலசேகரன் ஆகியோர் காலத்தவை. இருப்பினும் இக்கோயிலில் உள்ள பெரும்பான்மைக் கல்வெட்டுக்கள் சாயன உடையார் துவங்கி இரண்டாம் வெங்கடா ஈறாக உள்ள விஜயநகர மன்னர்கள் காலத்தைச் சார்ந்தவையாகும். காஞ்சியைக் கைப்பற்றுவது என்பது ஓர் சிறந்த கௌரவம் மிக்க சாதனையாக மன்னர் கொண்டுள்ளனர் என்பது இக்கல்வெட்டுக்களிலிருந்து விளங்குகிறது.

## கல்வெட்டுக்கள் காட்டும் அரசியல் :

கி.பி. 13-ஆம் நூற்றுண்டின் மத்தியில் விஜயாலயனால் தோற்றுவிக்கப்பட்ட பிற்காலச் சோழப்பேரரசு சீர்குலையத்துவங்கியத்தருணத்தில் காஞ்சிமாநகர் அதைச்சுற்றியுள்ள பிரதேசங்களின் அரசியல் விதி நிர்ணயம் செய்யப்படாததாக தனி ஊசல் போன்று ஒரு குலத்திற்கு உரிய அரசர்களிடம் அடிபணிந்து கொண்டிருந்தது. காகதீயமன்னன் கணபதி கி.பி. 1249-ல் காஞ்சியைக் கைப்பற்றினான். வரதராஜசுவாமி கோயிலில் உள்ள அவர் காலக்கல்வெட்டு அவனுடைய அமைச்சர் பிரம்மப சேத்தி என்பார் இக்கோயிலுக்கு அளித்த கொடையைப்பற்றிக் குறிக்கிறது. கி.பி. 1254-ஐக் குறிக்கும் காடவ கோப்பெருஞ்சிங்கன் கல்வெட்டும், தெலுங்கு சோழன் விஜயகண்ட கோபாலன் கல்வெட்டும் கிடைத்துள்ளன. முன்னது ஜூலைத் திங்களில் பொறிக்கப்பட்டது, பின்னது செப்டம்பரில் பொறிக்கப்பட்டது. இரண்டு மாத காலத்தில் ஏற்பட்டுள்ள அரசாட்சி மாற்றம், அக்காலத்து விளங்கிய நிலையற்ற அரசியல் சூழ்நிலையையும், ஆதிக்கப் போட்டியையும் குறிக்கிறது. மீண்டும் 1257-ஆம் ஆண்டு துவக்கத்தில் விஜயகண்ட கோபாலன் காஞ்சியை ஆண்டான். ஆனால் அவ்வாண்டு மே மாதம் கோப்பெருஞ்சிங்கன் காஞ்சியைக் கைப்பற்றினான். (Sewell, Historical Inscriptionof India. P. 152) இம்மன்னர்கள் கைகளிலிருந்து காஞ்சி பாண்டியர்வசம் மாறிற்று. பாண்டியர் பிடியும், பின்பு மாலிக்காபூர் படையெடுப்பினால் தளர்ந்தது. மாலிக்காபூர் படையெடுப்புபற்றி வரதராஜர் கோயில் கல்வெட்டுக்களில் குறிப்பு இல்லை. ஆயினும் அவர் படையெடுப்பு முடிவு

## சந்தாதாரர்களுக்கு . . .

30-6-78 ஆம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சநதாவைப் புதுப்பித்துக் கொள்ளவும். T

57, 76, 252, 273, 319, 384, 440, 496, 517 521, 524, 806, 810, 1041, 1207, 1209, 1216, 1218, 1221, 1224, 1226, 1227, 1230, 1234, 1235, 1237, 1238, 1247, 1906, 1942, 1943, 1944, 1945, 1946, 1947, 1948, 1949, 1950, 1951, 1952, 1953, 1954, 1955, 1956, 1957, 1958, 1959, 1960, 1961, 1962, 1963, 1964, 1965, 1966, 1967, 1968, 1969, 1970, 1971, 1972, 1973, 1974, 1977, 1978, 1979, 1980, 1981, 1983, 2018, 2020, 2047.

பெற்றது பற்றிய குறிப்பை 1312-ஆம் ஆட்சிக் கல்வெட்டில் காண்கிறேம். அவ்வமயம் சேரமன்னன் ரவிவர்மன் குலசேகரன் காஞ்சியைக் கைப்பற்றினன். சமஸ்கிருதத்திலும், தமிழிலும் உள்ள அக்கல்வெட்டு, மன்னன் தனது 46-ஆம் வயதில் இரண்டாம் முறையாக முடிசூடியது காஞ்சியில்தான் என்று தெரிவிக்கிறது. வேகவதி நதிக்கரையில் நிகழ்ந்த இவ்விழாவில், மன்னன் அருளாளப் பெருமான் ஆலயத் திருப்பணிக்கும், திருவிழாக்கட்கும் ஒரு ஊரை கொடையாக அளித்தான். சேரர் ஆட்சி மூன்றே ஆண்டுகள்தான் நீடித்தது. கி. பி. 1316-ல் காகதீய மன்னன் மூன்ரும் பிரதாபருத்ரன் முப்புடி நாயகன் என்னும் தன் தளபதியினல், காஞ்சி மீது படையெடுத்து கைப்பற்றினன். காகதீய தளபதியும், முன்பு சோழ மன்னன் கொடையாக அளித்த ஊரின் வரிகளேனைத்தையும் கோயிலுக்குக் கொடையாக அளித்தான்.

## கோயிலுடன் தொடர்பு கொண்ட அரசப் பிரமுகர்கள் :

கால வெள்ளத்தில் அரசர்களும், அமைச்சர்களும், அறவோர்களும் இவ்வாலயத்தைப் போட்டி போட்டுக் கொண்டு தங்களது கொடையால் பரிபாலித்தார்கள். கி.பி. 1334-ல் ஹொய்சாள மன்னன் மூன்ரும் வல்லாளன் இக்கோயிலுக்கு வருகை புரிந்து, அபிஷேக மண்டபத்தில் வைப்பதற்கு 'வீர வல்லாளன்' என்னும் பெயருடைய அரியணையை அளித்தான். 'அரியான வல்லான்' என்னும் விதானத்தின் கீழ் அவ் அரியணை வைக்கப்பட்டது. இறைவனின் திருமேனி இவ்விதானத்தின் கீழுள்ள இந்த அரியணையில் விழாக் காலங்களில் வைக்கப்பட்டு, நம்மாழ்வார் திருவாய்மொழி ஓதப்பட்டது. அவ்வமயம் ஆலயத்திற்கு அரும்பணிபுரிந்தோர் தக்க முறையில் கௌரவிக்கப்பட்டனர்.

தெலுங்குச் சோழ பிரதிநிதிகள் அத்தியூர் ஆழ்வானின் அரும்பெரும் பக்தர்களாக விளங்கினர். ராஜகண்ட கோபாலன் தன்னை 'அருளாளபாத லாஞ்சனஸ்ய' என்று கூறிக்கொண்டார். ஆலயத்திருப்பணிக்கு கொடைகள் பல அளித்ததுடன் நில்லாமல், தன் பெயரால் 'ராஜகண்டகோபாலன் சந்தி' என்னும் சிறப்பு வழிபாட்டுக்கும் வகை செய்தான்.

கி.பி. 1516-ல் தன்னுடைய புனிதப் பயணத்தின்போது விஜயநகர மன்னர் கிருஷ்ணதேவராயர் இக்கோயிலுக்கு வருகை புரிந்தார். அவ்வமயம் கருவறை மேலுள்ள புண்யகோடி விமானத்திற்கு பொன் வேய்வதற்காக 1000 வராகன் பொன் அளித்தார். இக்கொடை பற்றிய செய்தி தமிழ், தெலுங்கு, கன்னடம் ஆகிய மும்மொழிகளிலும் பொறிக்கப்பட்டுள்ளது. மூன்று மாதங்கட்குப் பிறகு திரும்பிவரும் வழியில், மீண்டும் இவ்வாலயத்திற்கு விஜயம் செய்தார். அப்பொழுது வரதராஜ ஆலயம், மற்றும் கொம்பரேஸ்வரா ஆலய அதிகாரிகளேச் சந்தித்து விழாக்காலங்களில் இரு கோயில்களின் வாகனங்கள் எந்தப்பாதையிலே செல்ல வேண்டும் என்பதை நிர்ணயித்தார். முடிவில் இரு கோயில்களுக்கு அணிமணித் தேர்கள் அளித்தார். கி. பி. 1532-ல் அச்சுதராயர் தன் மனைவி வரததேவி, மகன் வெங்கடாத்திரி ஆகியோருடன் இவ்வாலய விஜயம் செய்தார். அங்கு 'முக்த துலாபாரம்' 'மகாதான ஸஹஸ்ர கோதானம்' என்னும் பல அறச்செயல்களேயும்புரிந்தார். அச்சுதராயர் காலத்தில் நிகழ்ந்த சம்பவம் ஒன்று குறிக்கப்பட்டுள்ளது. தன் முடிசூட்டு விழாவின்போது அச்சுதராயர் அருளாளப் பெருமாள், கொம்பாரேசுவரர் கோயில்களுக்கு நிலங்கள் அளித்து அதை இரு கோயில்களுக்கும் சமமாகப் பிரிக்கவேண்டும் என்று தன் கீழ் உள்ள ஆளுநர் சாளுவ நரசிம்மனுக்கு ஆணையிட்டார். ஆனல் அவ்வாளுநரோ ஆணையை அவமதித்து சிவன் கோயிலுக்குப் பெரும்பங்கு நிலம் அளித்தார். மன்னன் மீண்டும் காஞ்சியில் முகாமிட்டிருந்தபோது இக்குறைபாடு அவர் கவனத்திற்குக் கொணரப்பட்டது. மன்னனும் குறை கேட்டு, தன் முன்னிலையில் அக்குறைபாட்டைத் திருத்தியமைத்து, அதற்கான ஆவனங்கள் தயாரிக்கவும் உத்தரவிட்டான்.

## ஆலயத்துடன் தொடர்பு கொண்ட வைணவ ஆசாரியர்கள் :

இக்கோயில் கல்வெட்டுக்கள், இக்கோயிலுக்கும், வைணவ அடியார்கட்கும் உள்ள தொடர்பை விவரிக்கின்றன. மத்வ மத சித்தாந்த குரு வ்யாச தீர்த்தர் சாளுவ நரசிம்மனுக்கும், கிருஷ்ணதேவராயருக்கும் ஆன்மீக குருவாக விளங்கியவர். இவ்வாலயத்திற்கு வருகை தந்து ஆவணி மாதத்தில் அருளாளப் பெருமாளுக்கு சிறப்பு விழா எடுப்பதற்காக ஒரு ஊரைக் கொடையாக அளித்தார். மேற்படி விழாவில் நான்காம் திருநாளில் இறைவன் ஊர்வலம் வர தங்க சேஷ வாகனம் ஒன்றும் பரிசளித்தார்.

பராங்குச ஜீயர், வான்சடகோப ஜீயர் போன்ற வைணவப் பெரியோர்களும் கொடை அளித்துள்ளனர். பின்னவர்கௌசிகதுவாதசி நாட்களில் கௌசிக புராணத்தை இவ்வாலயத்தில் ஓதுவது வழக்கம். அச்சுத தேவராயரின் சமகாலத்தவர் என்று கருதப்பட்ட அவர், அக்கோயில் மடத்து ஜீயராகவும் விளங்கியிருக்கக் கூடும்.

## வைணவக் குடும்பங்களும், ஆலயமும் :

புகழ்பெற்ற வைணவக் குடும்பங்கள் இவ்ஆலயப் பணிகளுடன் தொடர்பு கொண்டதைக் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. அவற்றில் பின்வரும் வைணவக் குடும்பங்கள் முக்கிய

மானவை; கந்தாடை பரவஸ்து தல்லாபாக்கம், தொட்டாச்சார்யர், தாதாசார்யர், நல்லான் சக்ரவர்த்தி, பிரதிவாதி பயங்கரம் அண்ணன் ஆகியோர்.

விஜயநகர மன்னர்களால் கௌர விக்கப்பட்ட தல்லாபாக்கம் வம்சத் தார் சிறந்த கவிஞர்கள்; பல அறக் கொடைகளை நிறுவினர்கள். அவர் களில் குறிப்பிடத்தக்கவர்கள் பெரிய திருமலை அய்யங்கார், சிறிய திருமலை அய்யங்கார், திருவெங்களப்பர் ஆகி யோர். இறுதியில் குறிக்கப்பட்டவர் தெலுங்கில் 'பரமயோகி விலாசமு' என்னும் நூலை இயற்றியுள்ளார். விஜயநகர மன்னர்களிடம் மிக்க செல் வாக்குப் பெற்றவர்.

மற்றொரு வைணவப் பெரியார் எத்தூர் குமரதாதாசாரியார். அவர் இரண்டாம் வெங்கடர்க்கு குருவாக விளங்கினர். அருளாளப் பெருமாள் ஆலயம் உட்பட காஞ்சியில் உள்ள அனைத்து வைணவத் தலங்களுக்கும் 'ஸ்ரீகார்ய துரந்தரர்' ஆகப் பணிபுரிந் தார். அவருடைய கொடைகள் கல் வெட்டுக்களில் பொறிக்கப்பட்டுள் ளன. தன்னைப் பொன்னிலும், வெள் ளியிலும் நிறுத்தி, அதைக் கொண்டு தாயார் சன்னிதியின் 'கல்யாண கோடி விமானத்திற்குப்' பொன்வேய்ந் தார். கோயிலுக்கு வாகனங்கள் பல அளித்தார். தற்பொழுது அய்யங்கார் குளம் என்று வழங்கப்படும் குளக் கரையில் சஞ்சீவராயர் கோயில் எடுப்பித்து 'ஸமாமத்வம் சதி' என் னும் 20 செய்யுட்கள் கொண்ட சமஸ் கிருத நூலை இயற்றினர். அச்செய்யுட் கள் வரதராஜசுவாமி கோயிலில் பொறிக்கப்பட்டுள்ளன.

## திருவிழாக்கள் ;

வரதராஜசுவாமி கோயில் திரு விழாக்கள் குறிப்பாக வருடாந்திர 'கருடோத்சவம்' 'திருத்தேர்' ஆகி யவை சிறப்பு வாய்ந்தவை. கி.பி 13-ம் நூற்றாண்டைச் சார்ந்த ராஜ நாராயண சம்புவரையர் கல்வெட்டு ஒன்று இவ்விழாக்களைக் குறித்து விட்டு, யானை, குதிரை, கருடன். திருத் தேர் ஆகிய ஊர்திகளைப்பற்றியும் குறிக்கிறது. விழாக்காலங்களில் எந் தப்பாதைகள் வழியாக திருமேனிகள் ஊர்வலம் வரவேண்டும் என்றும் குறிப்பு காணப்படுகிறது, 'தோப்பு திருநாள்' (வசந்தோத்சவம்) போன்ற இதர விழாக்களும் குறிப் பிடப்பட்டுள்ளன.

## அரசன் பெயரால் வழிபாடுகள் :

ஆண்டு முழுவதும் நிகழும் விழாக் கள் தவிர, அரசர்கள், அதிகாரிகள் ஆகியோர் பெயரிலும் சிறப்பு விழாக் கள், வழிபாடுகள் நிகழ்த்தப்பெற்றன. அவற்றில் குறிப்பிடத்தக்கவை குலோத்துங்க சோழன் சந்நிதி, சுந்தர பாண்டியன் சந்நிதி, கண்டகோபாலன் சந்நிதி, ஆளப்பிறந்தான் சந்நிதி (சோழ ஆளப்பிறந்தார் சம்புவராயன் ஏற்படுத்தியது) ஆகியவையாகும்.

## ஆலய அமைப்பும் நிர்வாகமும்:

ஆலயப் பணியில் பலர் உள்ளனர். மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் ஆலயப் பணியில் 200 பேர் இருந்தனர். அவர்கள் 'திரிபுவன வீரன் பதியிலார்' என்று அழைக்கப்பட்டனர். சோழர் காலத்தில் ஆலயம் ஒரு சபையின் பராமரிப்பில் நிர்வகிக்கப்பட்டது. விஜயநகர மன்னர்கள் காலத் தின் 'ஸ்தானிகள்' குழு ஒன்றின் மூலம் நிர்வாகிக்கப்பட்டது. அரசனே, அவன் அங்கீகாரம் பெற்ற அதி காரியோ இக்குழுவை அமைத்தனர். கோயில் கருவூலம் 'ஸ்ரீபண்டாரம்' எனப்பட்டது. படையாவுகளும், கொடையும், கருவூலப் பெட்டிகளில் பத்திரப்படுத்தப்பட்டன. அவ்வாறு சேகரிக்கப்பட்ட பணம் கருவூலத்தில் ஆலயத்திற்குப் பயன்படும் வகையில் பல்வேறு லாபகரமான காரியங்களில் முதலீடு செய்யப்பட்டன. கருவூல அதிகாரிகள் 'ஸ்ரீ பண்டாரத்தார்' என்று அழைக்கப்பட்டனர்.

மேற்கூறியவற்றிலிருந்து அருளா ளப் பெருமாள் ஆலயத்தின் அருமை பெருமைகள் நன்கு தெரிகின்றன.

# ஓர் அறிவிப்பு

கி. பி. 15-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தத் தெலுங்கு இசைக் கவிஞரும், அவ்வேழு மலை களில் நின்றவண்ணம் கோலம் கொண்டிருக்கும் வேங்கடவனின் சிறந்த பக்தருமான ஸ்ரீ தாள்ள பாக்க அன்னமாசார்யர் அவ்நெடியோன் மீது பக்திச் சுவையும் காதற்சுவையும் மிக்குளி 32,000 கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். அன்னாரின் அச்சீர்மைமிகு கீர்த்தனைகளின் புகழ் எங்கும் பரவும் வகையில் அக்கவிஞரின் நினைவாக, திருப்பதியில் ரூ 4.5 இலட்சம் செலவில் 'ஸ்ரீ அன்மாச்சார்யா கலாமந்திரம்' ஒன்று கட்டப்பட்டுள்ளது. தற்போது அக்கலா மந்திரத்தில், சமயப்பற்றும் ஆன் மீகப்பற்றும் எங்கும் தழைத்தோங்கும் வகையில் நூலகம் ஒன்று திறக்கப்பட்டுள்ளது. இந்நூலகத் திற்கு இந்து சமயம், புராணம் மற்றும் இந்தியக் கலாசாரம் சம்பந்தப்பட்ட பத்திரிகைகள், நூல்கள் பக்தர்களிடமிருந்து இலவசமாக வரவேற்கப்படுகின்றன. மக்கள் சேவையே மகேசன் சேவையாகக் கொண்டு, இப்புனித சேவையில் பங்கேற்று அவ்வெல்லாம் வல்ல அலர்மேல் மங்கை உறைமார்பனின் அருளைப்பெறுவீர்களாகுக!

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

# சோலைமலை அழகர்

திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்கும் அழகர் பெருமானைப் பற்றி அந்தாதித் தொடையால் அமைந்த நூறு கட்டளைக் கலித்துறைகளை உடையது 'அழகர் அந்தாதி' எனும் நூல். இதனைத் 'திவ்விய கவி' என்று புகழ்பெற்ற பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் இயற்றியருளினர்.

## அழகர் திருநாமத்தின் மகிமை

தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளுக்கு அன்புடையவராய்-என்றும் அப்பிராட்டியைவிட்டு நீங்காதவராய் -தன் திருமேனியின் நிறத்தால் குவளை மலரையும் கடலையும் ஒத்தவராய்- செழித்த திருத்துழாய் மாலையை அணிந்தவராய்-சோலைமலையில் எழுந்தருளியிருக்கும் சுந்தரத்தோள் படைத்த அழகருடைய திருநாமங்கள்-

1. பக்தி பூண்டு தம் பெயரை உச்சரிக்கும் அடியவரின் நெஞ்சைப் பக்தியின் மிகுதியால் உருகுமாறு செய்யும்.
2. ஆனந்தத்துடன் கூடிய அதிசயத்தின் காரணமாக அவர்களுடைய உயிரை நெகிழச் செய்யும்.
3. தொன்று தொட்டு தொடர்ந்து வருகின்ற அடியவரின் கருமங்களையும் அவற்றின் வஞ்சனையையும் ஒழிக்கும்.
4. அடியார்களின் பிறப்பினையும் ஒழிக்கும்.

என்று புகழ்கிறார் அய்யங்கார். கவிஞரின் சொல்லோவியம் வருமாறு:

"நெஞ்சம் உருக்கும்; உயிர் உருக்கும்;
தொல்லை நீள் வினையின்
வஞ்சம் முருக்கும்; பவம் முருக்கும்;
திருமால் அழகர்...நாமங்களே" (13)

[வினை-கருமம்; முருக்கும்-அழிக்கும்; ஒழிக்கும்]

இப்பாடலைப் படிக்கும்போது, 'நாராயண' என்னும் நாமத்தின் மகிமை கூறும் திருமங்கை ஆழ்வாரின் பாசுரம் நம் நினைவுக்கு வருகிறது. இதோ அப்பாசுரம்:

"குலந்தருஞ் செல்வந் தந்திடு மடியார்
படுதுய ராயின வெல்லாம்,
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்,
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்ற
தாயினு மாயின செய்யும்,
நலந்தருஞ் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராய ணவென்னும் நாமம்"

(பெரிய திருமொழி. 1.1:9)

## சோலைமலையின் பெருமை:

நவநீத கரத்தன் எழுந்தருளியிருக்கும் தலமான சோலைமலையின் மகிமையையும் அய்யங்கார் பாடியுள்ளார்.

---

திரு. ந. கடிகாசலம்,
எம்.ஏ., டிப்.லிங்.
திருப்பதி

---

தன்னிடம் பக்தி கொண்டு வணங்கும் அடியார்களிடத்தில் அன்புடையவராகிக் கருணை பொழியும் எம்பெருமான் வாழ்கின்ற மாலிருஞ்சோலைமலையின் அருகில் கல்வியறிவு என்பதே சற்றும் இல்லாத மூடர்கள் வந்தாலும் அப்பொழுதே அவர்கள் முக்தி அடைவார்கள் என்பது அய்யங்காரின் நம்பிக்கை. இக் கருத்தை உள்ளடக்கிய பாடலின் வரிகள்:

"இடபகிரியில் கல்லா
முருடரும் அங்கு அயல் எய்தில்,
அன்றே,
அவர் முத்தர் அன்றே" (30)

[இடபகிரி - திருமாலிருஞ்சோலைமலை; முத்தர்-விடுதலை பெற்றவர்; முருடர்-விறகு போன்றவர்; உணர்வு இல்லாதவர்]

மேலும் ஒரு பாடலில்,

"ஆன் பொருப்பும்
வந்திக்கல் ஆம் எனின் சந்திக்கலாம்
உயர் வைகுந்தமே" (76)

[ஆன் பொருப்பு-சோலைமலை; வந்திக்கல்-வணங்குதல்; வைகுந்தம் - பரமபதம்]

என்கிறார். அஃதாவது, திருமாலிருஞ்சோலைமலையை வணங்கினால் எல்லாவற்றிலும் உயர்வான பரமபதத்தை அடையலாம் என்பது கருத்து.

## நெஞ்சே! நீ வணங்கு

சோலை மாமலைக் கோவலனையே வணங்குதல் வேண்டும் என்று தன்னுடைய நெஞ்சத்துக்கு எடுத்துக் கூறுகிறார் கவிஞர். "நெஞ்சமே! கடல்போல் கரிய நிறத்தை உடையவன்-பாற்கடலில் பள்ளி கொண்ட தலைவன்-குற்றம் அற்றவன்-இலக்குமியின் கணவன்-கருடனை வாகனமாகக் கொண்டவன்-வலக் கையில் சக்கராயுதத்தை ஏந்தியவன்-சூரியனின் ஒற்றைச் சக்கரத்தையுடைய தேரினை பாரதப் போரில் மறைத்துக் காட்டியவன்-என்னும் பெருமைகளுக்கெல்லாம் உரியவனை அழகனை எப்பொழுதும் வணங்குவாயாக; நிலையாமையை உடைய இந்த உடலும், உயிரும் நினைவும் தம் நிலையில் இருந்து கலந்து சுடுகாட்டை அடைவதற்கு முன்பாக, நெஞ்சமே, கங்கையைத் தலையில் தரித்த சிவனும் தாமரையில் தோன்றிய பிரமனும் வணங்கிய பெருமை மிகு திருவடிகளை உடைய அழகர் பெருமானின் திருமாலிருஞ் சோலை மலையைச் சேர்வாயாக" என்று உரைக்கிறார் திவ்விய கவி.

# திருமலையிலும் திருப்பதியிலும் உணவு வசதிகள்

நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து யாத்திரை மேற்கொள்ளும் யாத்திரிகர்களின் அடிப்படை பிரச்னைகள், அவர்கள் போகும் இடங்களில் அமையும் தங்குவதற்கான இருப்பிடமும், உண்ணும் உணவும்தான். இதை மனதிற்கொண்டுதான் தி. தி. தேவஸ்தானம் திருமலையிலும் திருப்பதியிலும் யாத்திரிகர்கள் தங்குவதற்காக இலவச சத்திரங்கள் பலவற்றையும், வசதியான காட்டேஜுகள் பலவற்றையும் கட்டியுள்ளது. இவை எவ்வகையில் உதவியாக அமைந்துள்ளன என்பது திருமலைக்கு வருகை புரியும் ஒவ்வொரு யாத்திரிகருக்கும் நன்கு தெரியும். அடுத்து எழுவது உணவுப் பிரச்னை. திருமலையில் தனியார் உணவு விடுதிகள் பல இருந்தாலும், சுகாதாரமான முறையில் செய்யப்பட்டு, நியாயமான விலையில் வழங்கப்படும் உணவு வகைகள் தேவஸ்தானத்தாரின் உணவு விடுதிகளிலும், மற்றும் தேவஸ்தானத்தாரால் குத்தகைக்கு விடப்பட்டுள்ள தனியார் நடத்தும் சில சிறந்த உணவு விடுதிகளிலும் மட்டுமே கிடைக்கும். இவற்றைப் பற்றிய சில அடிப்படை விவரங்கள், யாத்திரிகர்களின் நன்மையின் பொருட்டு கீழே வழங்கப்பட்டுள்ளன.

## அன்னபூர்ண ஹோட்டல்

*(சங்கு மிட்டா காட்டேஜ் அருகில்)*

சிற்றுண்டி நேரம்: 5 A.M. to 10 P.M.
சாப்பாடு நேரம் : 9 A.M. to 3 P.M.
6 P.M. to 10 P.M.

அளவு சாப்பாடு ரூ. 1-75
முழுசாப்பாடு ரூ. 3-00

*(சனிக்கிழமைகளில் பாயசம் வழங்கப்படும்)*

இவற்றைத்தவிர கார வகைகளும், குளிர்பானங்களும், சூடான பானங்களும் இங்குக் கிடைக்கப் பெறலாம்.

## உட்லேண்ட்ஸ் ஹோட்டல்

*(தி. தி. தேவஸ்தான விருந்தினர் விடுதிக்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 6 A.M. to 10-00 P.M.
சாப்பாடு நேரம் : 11 A.M. to 2-30 P.M.
6 P.M. to 10-00 P.M.

தமிழ்நாடு சாப்பாடு ரூ. 4-00
வடஇந்தியச் சாப்பாடு ரூ. 6-00
அளவு சாப்பாடு ரூ. 1-75

இவற்றைத் தவிர இனிப்பு வகைகளும், குளிர்பானங்களும் நியாயமான விலையில் இங்குக் கிடைக்கும்.

## காஃபி போர்டு

*(கல்யாண கட்டாவிற்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 5 A.M. to 10 P.M.

மினி காஃபி (4 அவுன்ஸ்) 40 காசு
ஒரு கோப்பை காஃபி (6 அவுன்ஸ்) 60 காசு

இவற்றைத் தவிர சிற்றுண்டி மற்றும் குளிர் பானங்கள் போன்ற வசதிகளும் உள்ளன.

இந்நிறுவனத்தாரின் மற்றொரு கிளை பி. பி. ஷெட்டிற்கு (க்யூ ஷெட்டிற்கு) அருகில் உள்ளது.

வேலை நேரம் : 5 A.M. to 10 P.M.

தயிர்சாதம் (ஒரு பாக்கெட்) ரூ. 0-60
எலுமிச்சை சாதம் ,, ரூ. 0-60

குளிர்பானங்களும் கிடைக்கும்.

## டீ போர்டு

*(ஆழ்வார் ஏரிக்கு அருகில்)*

வேலை நேரம் : 6 A.M. to 11 A.M.
2 P.M. to 6 P.M.

டீ 25 காசு.
ஆம்ப்ரோ க்ளுகோ பிஸ்கட்டுகள்
(ஒரு பாக்கெட்) 75 காசு.

## தி. தி. தேவஸ்தானவிருந்தினர் விடுதி

சிற்றுண்டி நேரம் : 6 A.M. to 9 A.M.
3 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் : 11 A.M. to 2 P.M.
7 P.M. to 9 P.M.

முழு சாப்பாடு ரூ. 3-00

இவைத்தவிர கார வகைகளும், இனிப்பு வகைகளும் குறைந்த விலையில் கிடைக்கும்.

*(சாப்பாட்டுக்கும், சிற்றுண்டிக்கும் 3 மணி நேரத்திற்கு முன்பாகவே தங்கள் தேவைக்கு தகவல் தருதல் அவசியம்)*

## திருப்பதியில் தி. தி. தேவஸ்தான உணவு விடுதி

*(இரண்டாவது புதிய சத்திரத்திற்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 5 A.M. to 9-30 A.M.
2-30 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் : 10-30 A.M. to 2 P.M.
6-30 P.M. to 9 P.M.

அளவு சாப்பாடு ரூ. 1-50
தயிர் (ஒரு கப்) ரூ. 0-40

இதைத் தவிர சிற்றுண்டி வகைகள், ஆம்ப்ரோ க்ளுகோ பிஸ்கட்டுகள், குளிர்பானங்கள் முதலிய உணவு வசதிகளும் உண்டு.

தி. தி. தேவஸ்தானத்தின் முதல் சத்திரத்தில் உள்ள மற்றொரு தேவஸ்தான உணவு விடுதியிலும் சாப்பாட்டைத் தவிர மற்றைய சிற்றுண்டி வகைகள் குளிர் பானங்கள் போன்ற வசதிகள் காலை 5 மணி முதல் இரவு 9 மணி வரை யாத்திரிகர்களுக்குக் கிடைக்கும்.

## அழகரை வணங்குங்கள்

அழகர் பெருமானை அன்பு பூண்ட உள்ளத்துடன் வணங்குதல் வேண்டும் என்று அய்யங்கார் உலகத்தார்க்கு தம் பாடல் மூலம் வேண்டுகோள் விடுக்கிறார்.

1. மிகுந்த பக்தியுடன் நாராயணனின் நாமத்தை உச்சரியுங்கள். துளசி மாலைகளை அப் பெருமானின் திருவடிகளுக்குச் சார்த்துங்கள். இப்படிச் செய்தால் அழகர் பிரான் உங்களுக்குக் கருணை காட்டி, பேரின்பத்தில் நிலைநிறுத்தி வைப்பார். (9)

2. அழகரை வணங்குங்கள். பக்தி பூண்டு அவனை வணங்கினால் ஏழு தலைமுறைக்கும் நரகங்கள் தொடரமாட்டா; கடப்பதற்கு அரிதான பழிப்பும் நோயும் தீவினையும் நேரிடா. (15)

3. கூற்றுவன் வந்து உங்களைக் கொடிய வாளால் அறுக்கும் போது இறைவனை நினைப்பது என்பது அரிது. ஆகவே இப்பொழுதே அழகரின் திருவடிகளை நினைந்து வணங்குங்கள். வணங்கினால் உடனடியாக நற்குணம் உடையவராவீர்கள்.(51

4. கண்ணபிரானை அல்லாது முக்தி தருபவர் வேறு எவரும் இல்லை என்பதை உணர்ந்து, கண்டாகர்ணன் கண்ணனைச் சரண் அடைந்த நிகழ்ச்சியை நீங்கள் அறிந்து, அழகனுக்கே அடிமை பூண்டு நல்ல மனத்துடன் அவன் திருப்பெயரைச் சொல்லுங்கள். (55)

அய்யங்காரின் பாடல்களில் ஆழங் கால்பட்ட நாமும் அழகர் பெருமானின் திருநாமத்தின் பெருமையை உணர்ந்து அவன் திருத்தாளை வணங்கி அருள் பெறுவோமாக.



தொடர் கவிதை :

# திருவேங்கடவர் பொன்னூசல்

செஞ்சொற்கவி. T. S. ராஜகோபாலன்-சென்னை.

### குலசேகரப் பெருமாள் அனுபவிக்கும் வகை

வானாளுஞ் செல்வமொடு போகமெல்லாம்
மதியாத சேரலர்கோன் நுந்தம் முன்னர்
ஆனாத வன்பிலொரு படியே யாகி
நும்பவள மதுநோக்கிப் புகழ்கள் பாடக்
கோனேரி கொண்டமரை தீபங் காட்டிக்
குலவுஞ்சீர் வேங்கடத்தி னுச்சி யின்பால்
தேனூருந் துளவத்தார் மார்பி லாடச்
செழுந்தேனே! திருமார்வர்! ஆடி ரூசல்.

### பெரியாழ்வாரது அனுபவம்

நொடிதோறும் வளர்பரிவின் பட்ட நாதன்
நுமக்காகும் பூந்தொடையல் துளவத் தாரும்
இடியோடும் பழங்கொண்டு மங்க லங்கள்
இசைத்தருகே தாம்பூல மேந்தி நிற்பத்
துடியேறு மருங்குடைய சூர்க்க ணங்கள்
துதிபெய்யும் வேங்கடத்தி னுச்சி யின்பால்
கடியேறு திருக்காம்பன் சேலைபொங்கு
கதிர்பரப்பத் திருமார்வர்! ஆடி ரூசல்.

### திருப்பாணாழ்வார் தொண்டு

உறந்தையினில் நெற்கதிரில் வந்த பாணன்
உலப்பில்லா நுமதெழிலி னோதத் தாழ்ந்து
சிறந்ததனிப் பாணுக்குந் திறத்தி னோடும்
இசைந்ததனித் திருப்பாத கேசம் பாட
நிறந்திகழும் மேனியின ரும்பர் நேர்ந்து
நெருங்கிவரும் வேங்கடத்தி னுச்சி யின்பால்
புறந்திகழும் தீபநிரை தன்னிற் பொங்கும்
புகருடையீர்! திருமார்வர்! ஆடி ரூசல்.

### திருமங்கை யாழ்வாரது மங்களா சாஸநம்

கேளேந்து சீர்வரிசை முற்றும் பற்றிக்
கிளர்ந்ததனிச் சீற்றத்தால் நும்பால் நின்று
வாளேந்தி மனுபெற்ற மங்கைக் கோமான்
வாயார நும்பெருமை பாடி நிற்பக்
கோளேந்து கொடுமுடிகள் பசுமை பொங்கக்
குயிலுஞ்சீர் வேங்கடத்தி னுச்சி யின்பால்
வாளேந்தும் முகுரநிரை தம்முள் மேனி
வளங்காட்டுந் திருமார்வர்! ஆடி ரூசல்.

### எம்பெருமானாரது பெருமிதம்

எதிராசர் பெருமிதத்தால் நுந்தங் கையில்
இலங்குதிருச் சக்கரமுஞ் சங்குங் கண்டு
சதிரான தொன்மொழியால் வேதந்தம்பின்
சாரமெலாம் பொழிந்தினிய புகழ்கள் சாற்ற
அதிராச ரதிராச ரெனையர் துன்னி
அடிபணியும் வேங்கடத்தி னுச்சி யின்பால்
முதிராத குதலையர்கள் முறுவல் பூத்துத்
துதிபாடத் திருமார்வர்! ஆடி ரூசல்.

(12 ஆம் பக்கத் தொடர்ச்சி)

பின் ஓடினன்; அது மலை முகட்டில் செல்லும்; மேகக் கூட்டத்தில் மறையும்; அண்மையில் சென்றால் அகலும்; சிறிது தாமதித்தால் நீண்டு மாறு அணுகும். நின்றதே போலத் தோன்றி நீங்கும் என்று அதன் இயக்கத்தைக் கவிஞன் அழகுறக் காட்டுகின்றான். இனி இதனைப் பற்ற முடியாது என எண்ணிய இராமன் அதன் உயிர் போக்கு எனத் தன் தடுத்தற்கரிய அம்பினைச் செலுத்தினன். அம்பு பட்டு எட்டுத் திக்கிலும் அப்பாலும் கேட்கும்படி ஆ! சீதா இலட்சுமணா! என்று இராமனின் குரலில் ஒலி எழுப்பிக் கொண்டு வீழ்ந்தது அம் மான்.

மாயம் செய்பவர் இறப்பில் முன் உருவினை அடைதல் மரபு. எனவே தன் உண்மை உருவில் வீழ்ந்து கிடந்த வெய்யவனைக் கொடியோனைக் கண்டதும் இராமன் வியப்புற்றான். இவ்வுண்மையை முன் அறிந்து சொல்லிய தன் தம்பியை,

'ஐயன் வல்லன் என் ஆருயிர்
வல்லன் நான்
உய்ய வந்தவன் வல்லன் என்று
உன்னினன்' (802)

என்கிறார் கவி. மேலும் வீழ்ந்த அந்நீசன் மேனியை நின்றுற நோக்கினன் என்கின்றார். இவன் மாதவன் வேள்வியில் வந்த மாரீசனே என்பது தேறினன். இவன் குரல் எழுப்பியது கேட்டுச் சீதை கண்ணீர் சொரிவாள்; அயர்வாள் என்று வருந்தினன். எனினும் இவன் மாரீசன் என முன் அறிந்து கூறிய இலக்குவன் என் ஆற்றலையும் அறிவானாகையால் அவளைத் தேற்றுவான் என ஆறினன். மானாக வந்த இவன் மாள்வதற்காக வந்தவனல்லன்; சூழும்பொருள் ஒன்று இருத்தல் வேண்டும். அவன் எழுப்பிய குரலாலே அது தெளிவாகும். எனவே ஏதம் மூளுமுன் நான் சீதை இருப்பிடம் சேர்வேன் என்று மீண்டான் இராமன்.

ஆய்வு : வீழ்ந்தவனை வெய்யவன் என்றும் நீசன் என்றும் குறிக்கின்றார் கம்பர். முன்னர் இவரே அவனை 'இந்தியம் அடக்கிய மாரீசன்' என்று போற்றியுரைத்தார். அவன் இராவணனுக்குக் கூறிய அறிவுரைகள் சாலவும் சிறப்புடையனவாக அமைந்துள்ளன. நல்லுள்ளம் படைத்தவன் போலும், துணிவுள்ளவன் போலும் அற விருப்பினன் போலுமே அவன் பேச்சு அவனைக் காட்டுகின்றது. ஆனால் செயல்-மாய உருவம் எடுத்ததும், ஆ! சீதா! இலட்சுமணா! என்று கூவிக் கொண்டு வீழ்ந்ததும் அவன் வஞ்சகம் இயற்றினன் என்பதைக் காட்டுகின்றது.

பேச்சு இனியது; செயல் கொடியது. ஒருவனை இன்னான் என அறிவது அவன் செயலைக் கொண்டுதான் என்பதன்றோ வள்ளுவம்.

'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும்
தத்தம்
கருமமே கட்டளைக் கல்' (505) அன்றோ

அதனால்தான் கம்பர் வஞ்சகச் செயலுக்கு உட்பட்டதால் அவனை நீசன் என்கின்றார் எனப் பொருந்தும். வான்மீகி 'மாரீசோ மகாத் மந:' என்று குறிப்பிடுவர். அக்கருத்துக் கம்பனுக்கு உடன்பாடன்று.

அவன் ஏன் மாறினன். உயிரிழக்க நேரிடுமே, இராமன் கையால் இறத்தலே நன்று என முடிவு செய்தான் எனின் அதுவும் குறையுடைய தன்னலக் காரியமே. அச்சமே அவன் செயலுக்குக் காரண மாகின்றது. அச்சமே கீழ்களது ஆசாரம் என்றார் வள்ளுவரும். இவன் செய்கைக்கு அச்சமே காரணமெனின் அவன் கீழ்மகனே. நீசனே என்பதே கம்பன் முடிவு. கும்பகருணன் போன்று வேண்டியவர்க்காக வீரப்போர் புரிந்து இறந்தானுமல்லன்; விபீடணன் போன்று அறவுரை பயனற்றுப் போகவே இவனை விட்டகன்றானுமல்லன். உள்ளத்தில் நல்லனாயினும் வஞ்சகச் செயலுக்கு உட்படுகின்றான். அத்தகையவர் கீழ் மக்கள் என்பதே கம்பர் கருத்து. அதே நேரத்தில் இராவணனின் காமத்தன்மையும் இராமனின் காதலுள்ளமும், இலக்குவனின் தெளிவு, துணிவு இவையும் சீதையின் பேதமைப் பெண்ணியல்பும் நமக்கு விளக்கமாதற்கு இக்கதை மாந்தன்—மாரீசன் பயன்படுதல் அறிந்து இன்புறலாம்.

★

## அறிவிப்பு

சந்தாதாரர்கள் தங்களுடைய சந்தாத் தொகையினை ஒவ்வொரு மாதத்தின் 15ஆம் தேதிக்குள் மார்க்கெடிங் ஆபீஸர், பப்ளிகேஷன் செக்ஷன், தி. தி. தேவஸ்தானம் பிரஸ் காம்பௌண்டு, திருப்பதி என்ற முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். அப்போதுதான் அவர்களுக்கு அடுத்த மாதத்திலிருந்து 'ஸப்தகிரி' பத்திரிகையை தொடர்ந்து அனுப்ப ஏதுவாக இருக்கும். இருப்பில் பிரதிகள் இருப்பின் அம்மாதத்திலிருந்து (பணம் அனுப்பும் மாதத்திலிருந்து) ஸப்தகிரி பத்திரிகைகள் அனுப்பி வைக்கப்படும். எம். ஒ. கூப்பனில் புதிய சந்தாதாரர்கள் எந்த மாதத்திலிருந்து பத்திரிகை வேண்டும் என்பதைத் தெளிவாக எழுதுதல் வேண்டும். தொடர்ந்து தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளும் சந்தாதாரர்கள் மறக்காமல் எம். ஒ. கூப்பனில் தங்கள் சந்தா எண்களை குறித்தல் வேண்டும். ஸப்தகிரி மற்றும் தேவஸ்தான வெளியீடுகளுக்கான தொகையினை ,மார்க்கெடிங் ஆபீஸர், தி. தி. தேவஸ்தானம் பிரஸ் காம்பௌண்டு, திருப்பதி' என்ற முகவரிக்கு அனுப்புதல் அவசியம்.

# முப்புனித் தவதிகள்

(டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு.)

## பெரியாழ்வார் பெற்றெடுத்த ஆண்டாள்

### வேதங்கள் நான்கு

இதுகாறும் ஔவைப் பிராட்டியைக் கண்டோம். தாம் இயற்றிய ஆத்தி சூடியில் பிள்ளைகளுக்கென்றே சில வரி களை அமைத்தார், ஔவை தன் நீதி வாக்கியங்களில், குழந்தைகளுக் குரிய கல்வியைக் கசடறக் காண்பிக் கின்றார்.

'' ஓதுவது ஒழியேல்; இளமையிற் கல்
நூல் பல கல்; வித்தை விரும்பு ''

இந்நான்கு வரிகளும் நான்கு வேதங் கள் போல: ஊக்கமது கைவிடேல், எனக் குழந்தைகளுக்கும் பெரியோர் களுக்கும் ஓது வித்தார், ஔவையார். அப்பெருமாட்டியின் ஆத்திசூடியில் அஷ்டோத்தர நீதிகள் எனக் கூறப் படும் 108 நீதிகள் ஔவையார் இயற் றிய பிள்ளைத் தமிழ் என்றே கூறலாம்:

## பெரியாழ்வாருடைய பிள்ளைத் தமிழ்

இதே போன்று, சூடிக்கொடுத்த ஆண்டாளுடைய தகப்பனார் பெரியாழ் வார், கிருஷ்ண பரமாத்வை தன்னுள் ளத்திலும் வாக்கிலும் அநுபவிப்ப தைக் காண்போம்.

'வண்ணமழகிய நம்பீ', என்று அழைக்கிறார், கண்ணனை. 'சோத்தம் பிரான்' எனப் பகர்கின்றார், கிருஷ் ணனை. திருமஞ்சனம் செய்யக் கூப் பிடும் போது, 'வாய்த்த புகழ்மணி வண்ணா', என்று கண்ணன் பின் செல் கிறார். 'அழகனே, மாணிக்கமே, மணியே' எனக் கிருஷ்ணனை ஆலிங் கனம் செய்கிறார். நீதிகளை ஔவைப் பிராட்டிக் குழந்தைகளுக்குப் போதிப் பது போல, ஆண்டாளின் அருமைத் தந்தையார் கண்ணனை, மணிவண்ணனை அன்பு சொற்களுடன் அணைத்துக் கொள்கிறார்.

## நாச்சியாரின் தெய்வ கீதங்கள்

இம்முன்னுரையுடன் சூடிக்கொடுத்த நாச்சியாரை நாம் சிந்தித்து, நாச்சி யாரின் தெய்வ கீதங்களைக்காண்போம். ஔவையாரின் தெய்வ வாசகங்களை ஆண்டாளின் பாட்டுகளுடன் ஒப்பிடு வோம். ஆண்டாளுடைய வைணவச் சிந்தனையும், ஔவையாரின் சைவக் கொள்கையும் ஒருங்கே வைத்து நம் வாசகர்கள் முன் அமைப்போம்.

மறைவாணனை பெரியாழ்வார் ஸ்ரீ வட பெருங்கோயிலுடையான் கைங் கர்யார்த்தமாக, அழகிய திருநந்த வனம் அமைத்து, எம்பெருமானுக்கு உகப்பான திருத்துழாய்க்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருக்கும் ஒரு நாளில் திருத்துழாய்ச் செடி ஒன்றின் கீழே பார்வண்ண மடமங்கை எனப் பாரெங் கும் கொண்டாட, அதியிளங் குழந்தை தோன்றினள். பெரியாழ்வாருக்கு மட்டற்ற மகிழ்ச்சி.

'' இன்றோ திருவாடிப் பூரம் எமக்காக
வன்றோ இங்கு ஆண்டாள்
அவதரித்தாள் ''

எனக் குதூகலத்துடன் குழந்தையை எடுத்துக் கொண்டு, மனைவியிடம் மகவைக் கொடுத்து, ஆடினார், பாடி னார்.

இறைவன் திருவருளினால் ஆண்டாள் அவதரித்தது, ஔவையாருடைய பிறப்பை ஒத்திருக்கின்றது:

பெரியாழ்வார் குழந்தைக்குக் கோதை என்ற நாமதேயம் இட்டார். தமிழில் 'கோதை' என்ற சொல் 'மாலை' யைக் குறிக்கும். மாலை போல இனியவளாய் இருந்தாள் கோதை தன் வாழ்நாளில். வடமொழியில் இப் பெயரை 'வாக்கைக் கொடுப்பவள்', என்றும் விளக்குவர். கோதை அல் லது கோதா என்பது ஆண்டாளுக்கு அன்புப் பெயர். கோதா தேவி வட பெருங் கோயிலானுக்குக் சூடிக் கொடுத்த மாலைகள் பல. பாடிக் கொடுத்த நற்பா மாலைகள் 143. இவற்றில் திருப்பாவை முக்கியத்து வம் அடைந்திருக்கிறது. ஆண்டாளைத் 'திருப்பாவை பாடிய செல்வி' என சிறப்பித்துக் கொண்டாடும் பக்த உலகம்.

## ஆண்டாளின் பிள்ளைத் தமிழ்

இத்திருப்பாவையில், ஆண்டாள் தன் பரிவாரங்களான பாவையர்களைக் கூப்பிடுவது நாம் கவனிக்கத் தக்கது. இச்சொற்கள் ஆண்டாளுடைய பிள் ளைத் தமிழென்றே நாம் கருதுவதற்கு இடமுண்டு. ஔவைப் பிராட்டி நீதி களைக் கற்பித்தார் குழந்தைகளுக்கு. அதைப்போன்று, ஆண்டாளோ, குழந் தைகளைத் தன் அன்புச் சொற்களால் எழுப்புகிறாள்.

'நேரிழையீர்' என்று, அழகிய அணி களை அணிந்திருப்பவர்களை அழைக்கி றாள், ஆண்டாள்.

'பிள்ளாய், எழுந்திராய்' என சிறு பெண்களை தூக்கத்திலிருந்து எழுப்பு கிறாள்.

'பேய்ப் பெண்ணே' — மதிகெட்ட பெண்ணே, என்று தூங்கிக் கொண்டி ருந்தப் பெண்ணை எழுப்புகிறாள்.

'கோது கலமுடைய பாவாய்'— கண்ணனால் கொண்டாடப்பட்ட அழகிய பெண்ணே, என்று எழுப்புகிறாள்.

'கோவலர் தம் பொற்கொடியே'— கோபாலர்களின் குடியில் தோன்றிய, பொன் கொடி போன்றவளே, என வர்ணிக்கிறாள், ஆண்டாள்.

'நற் செல்வன் தங்காய்' — நல்ல செல்வத்தையுடைய தங்கையே என்றும் கூறுகிறாள்.

'போது அரிக் கண்ணினாய்'— தாமரைப் பூவையும் மானையும் ஒத்த கண்ணழகு வாய்ந்தவளே, என ஆநந்தத்தில் எல்லோரையும், மூழ்கச் செய்கிறாள்.

'நங்காய், நாணாதாய், நாவுடையாய், எழுந்திராய்' என்ற அடுக்குத் தொடரில் ஆண்டாள் தமிழை அநுபவிக்கிறாள்; நம்மையும் அநுபவிக்கச் செய்கிறாள். நங்கையே, நீ சொன்னபடி செய்யவில்லையே; நாணமும் இல்லாதவளே; இனிமையாகப் பேசவல்ல நாக்குடையவளே, என வர்ணிக்கிறாள் மற்றொரு பெண்ணை ஆண்டாள்.

இவ்வழகிய வார்த்தைகளை உரையாடிக் குழந்தைச் செல்வத்தைப் போற்றிய ஆண்டாளும் ஔவையாரும் குழந்தைகள் உள்ளத்தில் எற்றைக்கும், ஏழேழ் பிறவிக்கும் பசுமரத் தாணி போல் பதித்துக் கொண்டனர்.

## ஆண்டாள் இயற்றிய நூல்கள்

திருப்பாவை முப்பதும் செப்பினாள், ஆண்டாள். இந்தப் பிரபந்தத்தில் ஸ்ரீராமாநுஜர் ஈடுபட்டு, இத் திருப்பாவையின் பெருமையை உலகத்திற்களித்தார். அவரை 'திருப்பாவை சீயர்' என்று உலகம் போற்றிற்று. நாச்சியார் திருமொழியில் 14 திருமொழி வரிசைகள் உண்டு. ஒவ்வொரு திருமொழிக்கும் சற்று ஏறக்குறைய பத்து பாசுரங்கள் அமைந்தன. இத்திருமொழிகளில் மூன்று பத்துக்கள் முக்கியத்துவம் அடைந்தன. மாயவன் தன்னை மணம் செயக்கண்ட தூய நற்கனவைத் தோழிக்குரைத்தல்; வேங்கடவனிடம் மேகவிடு தூது; திருவரங்கத்துச் செல்வனைக் காமுறல். ஒளியுளாரான அணியரங்கத்து அம்மானுக்கே தீர்த்த காதலுடையராகி,

" தேனே! யென்தீவினைக் கோர்மருந்தே
பெருந்தேவர்க்
கோனே! யரங்கத் தரவனை மேற்
பள்ளி கொண்டவனே "

என்று கதறுகிறாள், ஆண்டாள். இப் பாசுரங்களில் தெய்வ வழிபாடு, இறைவனிடம் தன்னை ஒப்படைப்பது, அணியரங்கனிடம் சரணாகதி அடைவது, இவற்றைக் காண்கின்றோம்.

## திருப்பாவையின் தோற்றம்

ஔவையாருடைய தெய்வ வழிபாட்டை பளிங்கு போல, அவரின் நீதி நூற்களால் தெரிந்து கொள்கிறோம். ஆண்டாளின் பாசுரங்களிலோ கிருஷ்ணபிரானைப் பல கோணங்களில் பார்க்கிறோம். பாற்கடலில் யோக நித்திரை செய்கிற பெருமானை, 'பாற் கடலுள் பையத் துயின்ற பரமன்' என்கிறாள் ஆண்டாள். வாமனனாய் திருவவதரித்து, ஓங்கி வளர்ந்து உலகங்களைத் திருவடிகளால் அளந்த புருஷோத்தமனை, 'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்று புகழ்கிறாள், கோதை. கோகுலத்தில் தோன்றிய அழகிய தீபமங்களகரமான ஜோதியாகிய கண்ணனை, 'ஆயர் குலத்தினில் தோன்றும் அணி விளக்கு' என்று மனத்தினால் சிந்தித்து, வாயால் பாடுகிறாள்.

மீண்டும் பார்க்கிறோம்; பெரிய மாயச் செயல்களையுடையவன், ஸ்ரீவைகுந்தம்' எனப் பகர்கிறாள்.

'பங்கயக் கண்ணன்' — தாமரை போன்ற திருக்கண்களை உடையவன் என்றும் கண்ணனின் கண்ணழகைப் போற்றுகின்றாள்.

'விமலா, திருவே, பெரியாய், உலகம் அளந்தாய், நெடுமால், மணிவண்ணா, ஆலின் இலையாய், கோவிந்தா, மாதவா, கேசவா, எனப் பல கோணங்களிலிருந்து, தன் கோரிக்கைகளைத் தெளிவு படுத்துகிறாள், ஆண்டாள்.

ஆண்டாள் அருளிய 'திருப்பாவை' யும், மாணிக்கவாசக சுவாமிகள் இயற்றிய 'திருவெம்பா' வும் முக்கியமான நூல்கள். இவைகளைப் பாவைப் பாட்டு என அழைக்கிறார்கள்.

இதுவரை ஆண்டாளின் பிறப்பு வளர்ப்பு இவைகளைக் கண்டோம். ஆண்டாள் இறைவனையே காதலித்து, அவரையே தன் மணவாளனாகத் தீர்மானிக்கிறாள். ஔவையாரோ, திருமணத்தை வெறுத்து, தன்னந் தனியாக, நாட்டின் நலத்திற்காக தன் ஆயுளை அர்ப்பணம் செய்கிறார். ஆண்டாளோ, ஸ்ரீரெங்கராஜாவைமணந்து அவனிடம் ஐக்கியம் அடைந்தார்.

இருவரும் நாட்டில் இரு திலகங்களாக விளங்குகின்றனர்.

இனி, ஆண்டாளாகிய திருமகளின் தனித் தோற்றத்தைக் காண்போம்.

## திருமகளின் தமிழ் தோற்றமும் தேவாமிருதமும்

அன்பு நெறியில் ஆண்டவன் அடியார்க்கு அடியவனாகிறான். இவ்வன்பு நெறியைக் கோதை கையாண்டாள். 'இவள் என்னைப் பரம பக்தியால் ஆண்டு கொண்டாள்' என்று கூறிக் கொண்டு பெரியாழ்வார் கோதா தேவியைப் புகழுகின்றார். இதற்குப்பின்பே கோதாவிற்கு ஆண்டாள் என்ற பெயர் வந்தது. பெரியாழ்வார் பெற்றெடுத்தப் பெண் என்றும், ஆழ்வார் திருமகள் என்றும், ஆண்டாளைச் சிறப்பித்துப் பேசுகிறார்கள்.

கோதை இளமை முதல் கல்வியும் கலைகளும் கற்று, பாகவதர்களையே உறவினராகக் கருதி வந்தாள். அவர்களோடு மெய் மறந்து, பகவானுடைய கலியாண குணக்கடலில் ஆடு

வாள், பாடுவாள். இப்பாட்டை நாமும் பாடிப் பரவசமடைவோம்.

'' பெய்யுமா மழைபோல் வண்ணா! உன்தன்
பேச்சும் செய்கையும், எங்களை
மையல் ஏற்றி மயக்க, உன் முகம்
மாயமந்திரம் தான் கொலோ? ''

சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் பக்திக் காதலால் கண்ணனை சிம்மாசனத்தில் காண்கிறாள். கண்ணனோடு தன் மனோபாவனையால் கூடியிருந்து மனம் குளிர்கிறாள், பாவை நோன்பு நோற்கும்போது. அச்சமயம்அவளுக்கு ஆயர் நடையும், ஆயர் உடையும் அமைகின்றன. இப்பக்திச் சேர்க்கையை ஆண்டாளே அநுபவிக்கும் பாசுரத்தைப் பகர்வோம்.

'' எழிலுடைய அம்மனைமீர்
என்னரங்கத்து இன்னமுதர்,
குழலழகர், வாயழகர்,
கண்ணழகர், கொப்பூழில்
எழுகமலப் பூவழகர்,
எம்மானார்! என்னுடைய
கழல்வளையைத் தாமும்
கழல்வளையே ஆக்கினரே ''

திருவரங்கன் கண்ணனாகவே காட்சி அளித்து இவளை ஆட்கொண்டான். கோதை அழகிய மணவாளனோடு கலப்பதன் முன் அவள் உடம்பு அவளுக்குச் சுமையாக இருந்ததாகக் குருபரம்பரையினர் கூற்று. திருவரங்கனிடம் கலந்த பிறகு, இவள் உடம்பு மென்மையாகத் தோன்றியதாம். பெருஞ்சுமை தன்மேல் இருந்து இறங்கி விட்டது போன்ற உணர்ச்சி இவளுக்கு ஏற்பட்டதாம். இந்த நிலைமை, காரைக்கால் அம்மையார் தன் ஊனுடலை உதறித் தள்ளிவிட்டு, பேயார் ஆனதை ஒப்பிடலாம். இங்கு ஒன்று நாம் கவனிக்கவேண்டியது. ஆண்டாள் இறைவனிடம் ஊனுடம்போடு கலந்து மறைந்தாள். காரைக்கால் அம்மையாரோ தன் ஊனுடலை உதறித் தள்ளி விட்டு, சிவனடியில் புகுந்தாள்.

இராமானுஜராகிய திருப்பாவை சீயருடைய வாக்கைக் கவனிப்போம்.

“அனந்த கலியாண குணங்களுடைய புருஷோத்தமன் ஒருவனே, அழகனும் அன்பனும் காதலனும் அழகிய மணவாளனும் அனைவரையும் ஆட்கொள்ளுகிறான்''

என்ற பாஷ்யகாரருடைய திருவாக்கை உச்சரித்துக்கொண்டே தெவிட்டாத திசையில் திரும்புவோம், நாம்.

## கோதா தேவியாரும் ஔவைப் பெருமாட்டியும்

கோதை அவதரித்தது ஓர் நந்தவனத்தில்; ஔவை பிறந்தது ஓர் பாணர் குடியில். நந்தவனத்தின் பெருமையைத் தன் மலர்களால் வர்ணிக்கிறாள், ஆண்டாள். பாணர்களின் பாட்டின் இசையில் கட்டுண்டு, நீதிகளைக் கற்பித்தார் ஔவையார். இரு பெண் மணிகளும் குழந்தைகளைப் பாராட்டினர்; இரு ஜோதிகளும் தெய்வ வழிபாட்டை அலங்கரித்தனர். ஔவைப் பிராட்டி முதுமையையும் பாராட்டாமல், நாட்டில் சேவை செய்து அநேக ஆண்டுகள் சஞ்சரித்தார். ஆண்டாளோ வடபெருங் கோயிலானுக்குப் பணி புரிந்து அரங்கநாதனிடம் பற்று கொண்டு, அவனிடம் ஐக்கியமடைந்தார். ஔவையார் கைலாசத்திற்கு விநாயகரால் கொண்டு செல்லப்பட்டு, சிவபெருமானின் கருணையால், அவனிடம் சரண் அடைந்தார். ஆண்டாளோ அழகிய மணவாளனிடம் உட்புகுந்து, அவனிடம் இரண்டறக் கலந்தாள்; உயரரங்கற்கே கண்ணி யுகந்தளித்தாள்.

ஔவைப் பெருமாட்டியார் யோக சித்தியால் உடம்பை முதுமைநோவுக்கு இரையாக்காமல், ஹிருதயத்தில் சுத்தமான எண்ணங்களைக் கொண்டு கபடமற்று, பகைமையற்று, நெடுங்காலம் வாழ்ந்து பரமனடி புகுந்தார். பக்தி யோகத்தில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு, திவ்யப் பிரபந்தங்களை ஓதி நாட்டிற்கு வழிகாட்டியாக அமைந்து, ஆநந்தத்தில் அரங்கனிடம் சரணம் புகுந்தாள், கோதா தேவி.

இங்கும் இறுதிக்கு வந்தோம். இரு பக்த மணிகளைக் கண்டு களிகூர்ந்தோம். இனி மூன்றாம் பெண் திலகம் காரைக்கால் அம்மையாரை அணுகுவோம்.

(தொடரும்)

## அறிவிப்பு

கடந்த சில நாட்களாக பல ஏமாற்றுப் பேர்வழிகள் 'திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரர்' எனும் தலைப்பில் பல துண்டுப் பிரசாரங்களையும் கைப்பட பல கடிதங்களையும் பொது மக்களுக்கு அனுப்பி, அவற்றில், மூலப்பிரதி ஸ்ரீ வேங்கடேஸ்வரரிடமிருந்து வந்தது என்றும், கடிதத்தில் கண்டுள்ள விஷயத்தின் இருபது பிரதிகளை மற்றவர்களுக்கு அனுப்பினால் நன்மை உண்டாகும் என்றும், தவறினால் பெருங்கெடுதி வரும் என்றும் கூறி பொது மக்களை ஏமாற்றியும் அச்சுறுத்தியும் வருகின்றனர். ஆனால் கடிதத்தில் கண்டுள்ளவை யாவும் சிறிதும் உண்மையில்லையாதலால், பொது மக்கள் இதுபோன்ற பிரசாரங்களைச் சிறிதும் பொருட்படுத்தத் தேவையில்லை என்று இதன் மூலம் தெரிவிக்கப்படுகின்றது.

செயலாட்சித் தலைவர்
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

# அதிசயத் தேர்

திரு. ராகுல் சிங்.

சென்ற ஆண்டு இறுதியில் திருமலையில் நடைபெற்ற வருடாந்திர பிரம்மோற்சவத்தின்போது, நான்கு மாட வீதிகளில், உருண்டோடிய 85 டன் எடையுள்ள மரத்தேரில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை, அன்று தேரை இழுக்க வந்த சுமார் 50,000 யாத்திரிகர்களில் பெரும் பாலோர் கவனம் செலுத்தியிருக்க மாட்டார்கள். ஆனால் குறுகிய அம்மாட வீதிகளில் அம்மாபெரும் தேர், சிறிதும் சிரமமின்றி வெகு சுச்சிதமாக திரும்பியதை நிச்சியம் அவர்கள் கண்டு அதிசயத்திருப்பர். சாதாரணமாக, ஒரே சீராக அமைந்து விளங்காது இருக்கும் மரச்சக்கரங்களைப் போலல்லாது, கத்திரி கொண்டு வெட்டியது போல் முழு வட்டங்களாக இருக்கும் அத்தேர்ச்சக்கரங்களைக்காண நேரிட்டு, அவர்கள் ஆர்வம் மேலிட தேரின் அடிப்பாகத்தைக் கவனித்தால் அங்கே எஃகு இருசும், 'ஹைடிராலிக் பிரேக்' கருவிகளும் பொருத்தப் பட்டிருப்பதைக் கண்டு திகைப்படைவர்.

புதுமை :

இன்னும் சற்று கூர்ந்து நோக்கின், அச்சக்கரங்களும் தூய எஃகினால் செய்யப்பட்டவை என்பதையும், அவை உண்மையான மரச்சக்கரங்களே என்று மயங்கும்படி, அவற்றிற்கு மாநிறம் பூசப்பட்டிருப்பதையும் காண நேரிடலாம். இத்தகு புதுமையை, ஆண்டுக்கு ஆண்டு ரூ. 15 கோடி, ரூ. 16 கோடி என்று கோடிக்கணக்கில், உயர்ந்துவரும் வருமானத்தைப் பெற்றுவரும், திருவேங்கடவன் உறையும் திருமலை கோயில் ஒன்றினால் மட்டுமே புகுத்த முடியும்.

நினைவு தெரிந்தவரை, முன்பெல்லாம் ஒவ்வொரு பிரம்மோற்சவத்தின் போதும், திருமலையில் கோயிலைச் சுற்றியுள்ள செவ்வக வடிவில் உள்ள கரடுமுரடான மாட வீதிகளில் தேரை இழுக்கச் சுற்றியுள்ள கிராமங்களிலிருந்து 5,000க்கும் மேற்பட்ட யாத்திரிகர்கள் வருவதுண்டு. ஏன் இன்னும் பலர் வட நாட்டிலிருந்தும் வருவர். தேரை நிறுத்துவதற்காக, உருண்டோடும் சக்கரங்களுக்குக் குறுக்கே மிகப்பெரியதானமரக்கட்டைகளை உருட்டுவதும், தேரின் திசைத் திருப்பக் குறிப்பிட்ட கோணத்தில் சக்கரங்களுக்கிடையே முக்கோண வடிவ ஆப்புகளை செருகுவதும் பெரும் சாகசச் செயல்களாகத் தோன்றும். ஆனால் சுற்றிலும் நெருக்கமான கூட்டம் இல்லாதவரை, தேரின் முன்பின் விரைவோட்டங்கள் ஆபத்தைக் காட்டிலும், வேடிக்கையாகவே திகழும்.

திருப்பதிக்கும் திருமலைக்கும் சீரான மலை வழிச் சாலைகள் போடப்பட்ட பிறகு, திருமலைக்கு வரும் யாத்திரிகப் பொது மக்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகிவிட்டதால், தற்போது இந்நிலைமை, முற்றிலும் மாறி விட்டது. ஆகையால்தான், ஒவ்வொரு ஆண்டும், இத்தேர் சம்பந்தப்பட்ட பொறுப்பை ஏற்றுள்ள தேவஸ்தான செயற் பொறியாளர், தேர் எவ்வித விபத்திற்கும் உள்ளாகாது திருமலையில் நான்கு மாட வீதிகளையும் திரு வீதி வலம் புரிந்ததைத் தொடர்ந்து, அந்த ஆண்டு பிரம்மோற்சவம் நன்கு முடிந்தபின், இறைவனுக்கு நன்றி செலுத்தும் வகையில், தன் தலை முடியினை மழித்துக் கொள்வாராம்.

ஆனால் செயற் பொறியாளரின் துரதிருஷ்டம், 1973 ஆம் ஆண்டு வருடாந்திர திருமலை பிரம்மோற்சவத்தின் போது, தேர் தன் நிலை இழந்து ஓட, அதன் ராட்சத சக்கரங்களுக்கு அடியில் யாத்திரிகர்கள் *சிலர் நசுங்கி மாண்டனர். இதன் விளைவாகத் தான் 'பெல்' நிறுவனத்தாருக்கும் தேவஸ்தானத்திற்கும் தொடர்பு ஏற்பட்டது.

'பெல்' நிறுவனத்தின் தலைமை மேலாளர் (தற்போது கனரக தொழிற்சாலைகளின் செயலாளரும் ஆவார்) திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்கள், தன் பொறியாளர்களின் உதவியுடன் சில ஆண்டுகளுக்கு முன்பு இதைவிட எடை அதிகமாகவுள்ள திருவையாறு கோயில் தேரினை ஓட வைத்தார். பல வருடங்களாக நகராத இருந்த அத்திருவையாறு தேரினை, வாழ்க்கையில் சற்றும் முன்னேறாத மனிதர்களுக்கு உவமை கூறும் அளவுக்கு அத்தேரின் இயக்க மற்றத் தன்மை பிரசித்தி பெற்றிருந்தது. ஆனால் இதனை ஒரு சவாலாகக் ஏற்றுக் கொண்டு, 6 மாத காலத்திற்குள், எஃகினால் சக்கரங்களையும், இருசையும் பொருத்தி, 'ஹைடிராலிக் பிரேக்' முறை அமைத்து, 25 வருடங்கள் நகராது இருந்த அத்தேரினை திருவையாறு தெருக்களில் பவனி வரச் செய்தார் 'பெல்' நிறுவனத்தின் தலைமை மேலாளர்.

இதனைக் கேள்வியுற்ற தி. தி. தேவஸ்தானத்தின் செயலாட்சித் தலைவர், திரு. பி. எஸ். ராஜகோபால ராஜு அவர்கள், இது போன்ற புதுமையினைத் திருவேங்கடவன் திருத்தேரினுக்கும் அமைத்துத் தருமாறு 'பெல்' நிறுவனத்தைக் கேட்டுக் கொண்டார். 'பெல்' நிறுவனத்தின் தலைவர் ஒரு தீவிர பாலாஜி பக்தரானதால், பணி விரைவாக முடிந்து விட்டது.

அறிவியலும், கலாசாரமும் ஒன்றிணைந்த இப்புதுமையை, மிக எளிதாக திரும்பும் அப்பழுது பார்க்கப் பட்ட தேரினை கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்த ஒரு பிரஞ்சு நாட்டுக் காரரிடம் சுட்டிக் காட்டிய போது அவர் குழப்பமும் திகைப்பும் கலந்த பார்வையுடன் கூறியது இதுதான்: ''இந்தியாவில் மட்டும் தான் இது போன்று ஒன்று நடக்க முடியும்.''



(*3 நபர்கள்—ஆசிரியர்)

# செய்திச் சுருக்கம்

## ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஏழை இல்லம்

திருப்பதி அருகே உள்ள அக்காராம் பள்ளி எனும் இடத்தில், தொழு நோயால் அவதியுறும் நோயாளி களுக்கு மறுவாழ்வு வழங்கும் வகை யில்,தி. தி. தேவஸ்தானத்தாரால்நடத் தப்படும் ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஏழை இல்லத்தில் 25-3-78 அன்று ஆந்திர மாநில ஆளுநர் திருமதி சாரதா முகர்ஜி அவர்களால், புற-நோயாளி களுக்கான புதிய மருத்துவக் கூடம் ஒன்றும், நவீன வசதிகளைக் கொண்ட ஒரு புதிய அறுவை மருத்துவக் கூடம் ஒன்றும் திறந்துவைக்கப்பட்டன.

இதை ஒட்டி ஏற்பாடு செய்யப் பட்ட விழா, அன்று மாலை 6 மணி அளவு இறை வணக்கப் பாடலுடன் இனிது துவங்கியது. பின்னர் விழா விற்கு வருகை புரிந்தோரை வரவேற் றுப் பேசிய தி. தி. தே. பொறுப்பாண் மைக் குழுத் தலைவர் திரு. சி. அண்ணு ராவ் அவர்கள், தம்முரையில், 1942 இல் துவக்கப்பட்ட இவ் ஏழை இல்லம் படிப்படியாக உயர்ந்து இன்று 200க்கும் மேற்பட்ட நோயாளிகளைச் சேர்த்துக்கொள்ளும் வகையில் திகழ் கின்றது என்றும், விரைவில் இங்கு செயற்கை உறுப்பு நிலையம் ஒன்றும் அமைக்கப்பட இருப்பதாகவும் கூறி ஞர். இவ் ஏழை இல்ல வளர்ச்சிக்குப் பலவகைகளில் உதவி புரிந்திட்ட அரசுக்கும் தனி நிறுவனங்களுக்கும் நன்றி தெரிவித்துக்கொண்டார். அடுத்து தி. தி. தேவஸ்தான உயர் மருத்துவ அலுவலர் டாக்டர். ஏ. பி. ராமசந்திரா ரெட்டி அவர்கள் தான் வாசித்த அறிக்கையில், தொழுநோ யால் அவதியுறும் நோயாளிகளின் துன்பத்தைப் போக்குவதற்குத் தேவஸ்தானம் மேற்கொண்டுவரும் முயற்சிகளையும், ஏழை இல்லத்தில் வழங்கப்படும் வசதிகளையும் குறிப்பிட் டார்.

ஆந்திர மாநில இந்து சமய அற நிலைய ஆணையர் திரு.கே. புருஷோத் தம நாயுடு அவர்கள் இவ்விழா சம் பந்தப்பட்ட மலர் ஒன்றினை வெளி யிட்டார்.

பின்னர் விழாவின் சிறப்பு விருந் தினராகப் பங்கேற்று உரையாற் றியபோது, ஆந்திர மாநில இந்து சமய அறநிலைய அமைச்சர் திரு. வி. வெங்கட நாராயணு அவர்கள், தொழு நோய் ஒரு காலத்து மிகப் பயங்கர மானதொரு நோயாகக் கருதப்பட்டு வந்தது என்றும், இன்று அவ் அச்சம் நீங்கும் வகையில் பல நவீன மருத்துவ வசதிகள் ஏற்பட்டுள்ளன என்றும் கூறிஞர். தொடர்ந்து பேசுகையில், மலையடிவாரத்தில் இயற்கைச் சூழ லுடன்கூடிய 50 ஏக்கர் நிலத்தில் ''மக்கள் சேவையே மகேசன் சேவை'' என்ற தொண்டு மனப்பான்மையுடன் இவ் ஏழை இல்லத்தை நடத்திவரும் தேவஸ்தானத்தை வெகுவாகப் பாராட்டிஞர்.

ஏழை இல்லம் வாழ் நோயாளி களுக்குத் தெலுங்கில் வாழ்த்துரை களைக்கூறி, தன் உரையைத் துவக்கிய ஆளுநர் அவர்கள், தொழுநோய் நவீன மருத்துவ உதவியால் எளிதாகக் குணப்படுத்த முடியும் ஆகையால், நோயாளிகள் தங்கள் நம்பிக்கையை இழத்தலாகாது என்றும், மேலும் இந் நோயால் அவதியுறும் ஆரம்ப நோயா ளிகளுக்கு அவர்கள் இதைப்பற்றிக் கூறி அவர்களுக்கு அறிவுறுத்த வேண் டும் என்றும் நோயாளிகளைக் கேட்டுக் கொண்டார்.

பின்னர் ஆளுநர் உரை தெலுங்கில் மொழி பெயர்க்கப்பட்டு வாசிக்கப் பட்டது.

ஏழை இல்லத்தின் சிறப்பு மருத்துவ ரான திரு. டி. பாஸ்கர்ராவ் அவர்கள் நன்றி நவின்றுர்.

## புதிய மாணவர் விடுதி அடிக்கல் நாட்டு விழா

31-3-78 அன்று காலை 9-30 மணி அளவில் தி.தி. தேவஸ்தான கல்வி நிறு வனங்களில் ஒன்றான திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலைக்கல்லூரிக்கான மற்றுமொரு புதிய மாணவர் விடுதி கட்டிடத்திற்கு ஆந்திர அரசு இந்து சமய அறநிலைய ஆணையர் திரு. கே. புருஷோத்தம நாயுடு அவர்கள், சங்கு ஸ்தாபன பூஜைக்குப் பிறகு அடிக்கல் நாட்டினர். அன்று காலை நடை பெற்ற அடிக்கல் நாட்டு விழாவிற்கு வருகை புரிந்திருந்தோரை வரவேற் றுப் பேசிய, தேவஸ்தான செயலாட் சித் தலைவர் திரு. பி. எஸ். ராஜ கோபாலராவு அவர்கள் தம்முரை யில் மாணவர்களின் வேண்டுகோளுக் கிணங்கி இவ்விடுதி கட்டடம் கட்டப் பட உள்ளது என்றும், மேலும் விரை வில் அலிபிரி அருகில் சுமார் 50 ஏக்கர் நிலப்பரப்பில் பல கல்வி நிறு வனங்களுக்கான கட்டடங்கள் கட்டப் பட உள்ளன என்றும் அறிவித்தார். தொடர்ந்து பேசுகையில் அவர், தற் போதைய பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. சி. அண்ணுராவ் அவர் கள் தேவஸ்தானத்தின் செயலாட்சித் தலைவராகப் பதவியில் இருந்தபோது குறைந்த விலையில் தேவஸ்தானத்திற் கெனப் பல காலி மனைகளை வாங்கியது இன்று தேவஸ்தானம் பல்வேறு வளர்ச்சித் திட்டங்களை எளிதாக மேற் கொள்ளுதற்குறிய ஒரு சூழ்நிலையை உருவாக்கியது என்றும்குறிப்பிட்டார்.

திரு. சி. அண்ணுராவ் அவர்கள் விழாவிற்குத் தலைமைதாங்கி உரை யாற்றுகையில், தேவஸ்தானம் மேற் கொள்ளும் பல்வேறு நன் முயற்சி களுக்கு உதவிபுரிந்து ஊக்கமளித்து வரும் அரசின் இந்து சமய அறநிலைய ஆணையருக்குத் தன் நன்றியைத் தெரி வித்துக்கொண்டு மாணவ சமுதாயம் பயன்பெறும் வகையில் திருப்பதியில் பல கல்வி நிறுவனங்களை ஏற்படுத்தத் தான் மேற்கொண்ட முயற்சிகளை நினைவு கூர்ந்தார்.

விழாவின் சிறப்பு விருந்தினரான திரு. கே. புருஷோத்தமநாயுடு அவர் கள் பேசுகையில், ஒரு கல்லூரியின் விடுதி எவ்வகையில் மாணவ உள்ளங் களில் ஏற்றத்தாழ்வற்ற ஒரு பரந்த மனப்பான்மையைத் தோற்றுவிக் கின்றது. என்பதைக் குறிப்பிட்டு, பெருகிவரும் மாணவ சமுதாயத் தினரை மனதிற்கொண்டு, தேவஸ் தானம் ஆற்றிவரும் நன் முயற்சிகளைப் பெரிதும் பாராட்டிப் பேசிஞர். தொடர்ந்து பேசுகையில், கோயில் வருமானம் எவ்வகைகளில் செலவிடப் பட்டு வருகின்றது என்பதை விளக்கிக் கூறும்போது, தேவஸ்தானத்தின் நேரடிப் பொறுப்பில் வேதங்கள் தெலுங்கில் மொழி பெயர்க்கப்பட்டு

வருகின்றன என்றும், மேலே நாடுகளில் வாழ்ந்துவரும் இந்தியர்களுக்குப் பெரிதும் உதவும் வகையில், அங்கே பல இந்துக் கோயில்கள் கட்டப்பட்டும், மேலும் பல இடங்களில் கட்டுவதற்கான முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன என்றும் கூறினர்.

இறுதியில் கல்லூரி விடுதி காப்பாளர் திரு. எஸ். ஜி. எஸ். ஐவார்லு அவர்கள் நன்றி நவின்றார்.

## ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் 30வது நினைவு விழா

15ஆம் நூற்றாண்டைச் சார்ந்த தெலுங்குக் கவிஞரும், ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் பக்தருமான ஸ்ரீ தாள்ளபாக்க அன்னமாச்சார்யாவின் 30வது வருடாந்திர நினைவு விழா 4-4-78 அன்று திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. அன்று காலை தி.தி. தேவஸ்தான தலைமை அலுவலகத்திலிருந்து அன்னமாச்சார்யா கலா மந்திரத்திற்கு ஸ்ரீ வேங்கடேஸ்வரா மற்றும் அன்னமாச்சார்யாவின் திருவுருவப்படங்கள் திருவீதி வலமாக கொண்டுவரப்பட்டன. பின்னர், கலா மந்திரத்தில், ஸ்ரீ வேங்கடேஸ்வரா இசை நாட்டியக் கல்லூரியின் முதல்வர் திரு. டி. பசுபதி மற்றும் அக் கல்லூரியின் விரிவுரையாளர் திரு. எஸ். ஆர். ஜானகிராமன், அக்கல்லூரி மாணவர் திரு. ஜி. பாலகிருஷ்ண பிரஸாத் ஆகியோர் அன்னமாச்சார்யா கீர்த்தனைகளைப் பாடினர். அடுத்து, அக்கல்லூரி மாணவிகளின் கோஷ்டி கானம் நடைபெற்றதைத் தொடர்ந்து அன்றைய காலை நிகழ்ச்சிகள் இனிது முடிவடைந்தன.

அன்று மாலை 5-30 மணி அளவில் நடைபெற்ற பூஜை மற்றும் வேத பாராயணத்தைத் தொடர்ந்து, குமாரி ஷோபா ராணி தெலுங்கு வாழ்த்துப் பாடலைப் பாடினர்.

தேவஸ்தான இசை நாட்டியக் கல்லூரியின் முதல்வர் திரு. டி. பசுபதி அவர்கள் விழாவில் பங்கேற்று உரையாற்றுகையில் அன்னமாச்சார்யாவின் கவிதைகளின் பெருமைகளைப் பரப்ப தேவஸ்தானம் மேற்கொண்டு வரும் முயற்சிகளை விளக்கிக் கூறினர். அடுத்து திருமதி. டி. ஜெயா பசுபதி அவர்கள் ஆண்டறிக்கையை வாசித்ததைத் தொடர்ந்து, தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. எஸ். ராஜகோபால ராஜு அவர்கள் கூட்டத்தினரை வரவேற்று உரையாற்றுகையில், அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் பெருமைகளையும், சிறப்பினையும் பரப்பும் வகையில் தேவஸ்தானம் மேற்கொண்டுள்ள முயற்சிகளைக் குறிப்பிட்டு, அம்முயற்சிகளில் தேவஸ்தானம் வெற்றி பெற்றுவருவதையும் கூறினர். இம் முயற்சியில் ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகம் ஆற்றி வரும் உதவியினையும் குறிப்பிட்டார். பின்னர், அன்னமாச்சார்யாவின் கவிதைகளின் 24, 25 வது தொகுதிகளையும், அன்னாரின் தேர்ந்த கவிதைத் தொகுப்பு ஒன்றினையும், அன்னமய்யாவின் வரலாற்றுக் குறிப்பேடு ஒன்றினையும் செயலாட்சித் தலைவர் வெளியிட்டார்.

விழாவிற்குத் தலைமைவகித்து உரையாற்றிய ஆந்திர அரசவைக் கவிஞரும், பிரபலத் தெலுங்குத் திரைப்படக் கவிஞருமான டாக்டர். தாஸரதி அவர்கள் அன்னமய்யாவின் பாடல்களைக் குறிப்பிட்டு பேசுகையில், கிராமியச் சொற்களையும் நீதிக் கருத்துக்களையும் மிக எளிமையாக உவமை நயந்தோன்ற அன்னமய்யா தம் கவிதைகளில் தெரிவித்துள்ளார் என்று பல எடுத்துக்காட்டுகளின் மூலம் விளக்கிக் காட்டினர்.

பெங்களூர் ஆல் இண்டியா ரேடியோவின் முன்னாள் நிலைய இயக்குனரான திரு. ரஜனிகாந்தராவ் அவர்களும் இவ்விழாவில் பங்கேற்று, அன்னமய்யா பாடல்களில் உள்ள இசைத் தன்மையைப் பல பாடல்களைக் கொண்டு விளக்கினர். அடுத்துப் பேசிய ஸ்ரீவேங்கடேஸ்வரா கீழ்த் திசைக் கல்லூரியின் தெலுங்குத் துறைத் தலைவர் திரு. ஜி. ராமசுப்ப சர்மா அவர்கள் 'பக்தி' எனும் தலைப்பில், அன்னமய்யா பாடல்களில் விளங்கும் நாயகி-நாயக பாவத்தை விளக்கிப் பேசி, அதன் மூலம் பக்தியின் சிறப்பு எவ்வாறு அப்பாக்களில் சிறப்பிக்கப்பட்டுள்ளது என்பதைச் சில பாடல்களின் மூலம் எடுத்துக் காட்டினர். பின்னர் திருப்பதி ஸ்ரீ கோவிந்த ராஜசுவாமி கலைக்கல்லூரியின் தெலுங்கு விரிவுரையாளர் திரு. காமிஸெட்டி ஸ்ரீநிவாசலு செட்டி அவர்கள் பேசுகையில், அன்னமய்யா பாடல்களில் பொதிந்துகிடக்கும் சமூக சீர்திருத்தக் கருத்துக்களை விளக்கிப் பேசினர்.

பின்னர் தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. சி. அண்ணாராவ் அவர்கள், அன்னமாச்சார்யா சந்ததியினர்க்குப் பொன்னாடைப் போர்த்தி கௌரவித்தார். பின்னர், இவ்விழா ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்டப் பல்வேறு இசைப் போட்டிகளில் வெற்றிபெற்ற மாணவ, மாணவிகளுக்கும், தேர்ந்தெடுக்கப்பட்ட ஆசிரியர்களுக்கும் திரு. சி. அண்ணாராவ் அவர்கள் பரிசுகள் வழங்கினர்.

திரு. எஸ். ஆர். ஜானகிராமன் அவர்கள் நன்றி நவின்றார்.

பிறகு, விஜயவாடா ஆல் இண்டியா ரேடியோவின் நிலைய மிருதங்க கலைஞரான திரு. தண்டமூரி ராம்கோபால் ராவ் அவர்களை தி. தி. தேவஸ்தான ஆஸ்தான மிருதங்க வித்வானாக நியமிக்கப்பட்டதை ஒட்டி, அன்னாருக்கு, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் அவர்கள் பொன்னாடைப் போர்த்தி, தேவஸ்தானத்தின் சார்பில் தங்கப் பதக்கம் அணிவித்து கௌரவித்தார்.

அன்று இரவு 8-30 மணி அளவில் டாக்டர். எம். பாலமுரளி கிருஷ்ணா அவர்களின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது.

5-4-78 முதல் 9-4-78 வரை திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் காலையிலும் மாலையிலும் நடைபெற்ற பல்வேறு இன்னிசைக்கச்சேரிகளில் தி. தி. தேவஸ்தான ஆஸ்தான வித்வான்கள் பங்கேற்றனர். ★

# செய்திச் சுருக்கம்

## ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஏழை இல்லம்

திருப்பதி அருகே உள்ள அக்காராம் பள்ளி எனும் இடத்தில், தொழு நோயால் அவதியுறும் நோயாளி களுக்கு மறுவாழ்வு வழங்கும் வகை யில்,தி. தி. தேவஸ்தானத்தாரால்நடத் தப்படும் ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஏழை இல்லத்தில் 25-3-78 அன்று ஆந்திர மாநில ஆளுநர் திருமதி சாரதா முகர்ஜி அவர்களால், புற-நோயாளி களுக்கான புதிய மருத்துவக் கூடம் ஒன்றும், நவீன வசதிகளைக் கொண்ட ஒரு புதிய அறுவை மருத்துவக் கூடம் ஒன்றும் திறந்துவைக்கப்பட்டன.

இதை ஒட்டி ஏற்பாடு செய்யப் பட்ட விழா, அன்று மாலை 6 மணி அளவு இறை வணக்கப் பாடலுடன் இனிது துவங்கியது. பின்னர் விழா விற்கு வருகை புரிந்தோரை வரவேற் றுப் பேசிய தி. தி. தே. பொறுப்பாண் மைக் குழுத் தலைவர் திரு. சி. அண்ணா ராவ் அவர்கள், தம்முரையில், 1942 இல் துவக்கப்பட்ட இவ் ஏழை இல்லம் படிப்படியாக உயர்ந்து இன்று 200க்கும் மேற்பட்ட நோயாளிகளைச் சேர்த்துக்கொள்ளும் வகையில் திகழ் கின்றது என்றும், விரைவில் இங்கு செயற்கை உறுப்பு நிலையம் ஒன்றும் அமைக்கப்பட இருப்பதாகவும் கூறி னர். இவ் ஏழை இல்ல வளர்ச்சிக்குப் பலவகைகளில் உதவி புரிந்திட்ட அரசுக்கும் தனி நிறுவனங்களுக்கும் நன்றி தெரிவித்துக்கொண்டார். அடுத்து தி. தி. தேவஸ்தான உயர் மருத்துவ அலுவலர் டாக்டர். ஏ. பி. ராமசந்திரா ரெட்டி அவர்கள் தான் வாசித்த அறிக்கையில், தொழுநோ யால் அவதியுறும் நோயாளிகளின் துன்பத்தைப் போக்குவதற்குத் தேவஸ்தானம் மேற்கொண்டுவரும் முயற்சிகளையும், ஏழை இல்லத்தில் வழங்கப்படும் வசதிகளையும் குறிப்பிட் டார்.

ஆந்திர மாநில இந்து சமய அற நிலைய ஆணையர் திரு. கே. புருஷோத் தம நாயுடு அவர்கள் இவ்விழா சம் பந்தப்பட்ட மலர் ஒன்றினை வெளி யிட்டார்.

பின்னர் விழாவின் சிறப்பு விருந் தினராகப் பங்கேற்று உரையாற் றியபோது, ஆந்திர மாநில இந்து சமய அறநிலைய அமைச்சர் திரு. வி. வெங்கட நாராயணா அவர்கள், தொழு நோய் ஒரு காலத்து மிகப் பயங்கர மானதொரு நோயாகக் கருதப்பட்டு வந்தது என்றும், இன்று அவ் அச்சம் நீங்கும் வகையில் பல நவீன மருத்துவ வசதிகள் ஏற்பட்டுள்ளன என்றும் கூறினார். தொடர்ந்து பேசுகையில், மலையடிவாரத்தில் இயற்கைச் சூழ லுடன்கூடிய 50 ஏக்கர் நிலத்தில் ''மக்கள் சேவையே மகேசன் சேவை'' என்ற தொண்டு மனப்பான்மையுடன் இவ் ஏழை இல்லத்தை நடத்திவரும் தேவஸ்தானத்தை வெகுவாகப் பாராட்டினார்.

ஏழை இல்லம் வாழ் நோயாளி களுக்குத் தெலுங்கில் வாழ்த்துரை களைக்கூறி, தன் உரையைத் துவக்கிய ஆளுநர் அவர்கள், தொழுநோய் நவீன மருத்துவ உதவியால் எளிதாகக் குணப்படுத்த முடியும் ஆகையால், நோயாளிகள் தங்கள் நம்பிக்கையை இழத்தலாகாது என்றும், மேலும் இந் நோயால் அவதியுறும் ஆரம்ப நோயா ளிகளுக்கு அவர்கள் இதைப்பற்றிக் கூறி அவர்களுக்கு அறிவுறுத்த வேண் டும் என்றும் நோயாளிகளைக் கேட்டுக் கொண்டார்.

பின்னர் ஆளுநர் உரை தெலுங்கில் மொழி பெயர்க்கப்பட்டு வாசிக்கப் பட்டது.

ஏழை இல்லத்தின் சிறப்பு மருத்துவ ரான திரு. டி. பாஸ்கர்ராவ் அவர்கள் நன்றி நவின்றார்.

## புதிய மாணவர் விடுதி அடிக்கல் நாட்டு விழா

31-3-78 அன்று காலை 9-30 மணி அளவில் தி.தி. தேவஸ்தான கல்வி நிறு வனங்களில் ஒன்றான திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலைக்கல்லூரிக்கான மற்றுமொரு புதிய மாணவர் விடுதி கட்டிடத்திற்கு ஆந்திர அரசு இந்து சமய அறநிலைய ஆணையர் திரு. கே. புருஷோத்தம நாயுடு அவர்கள், சங்கு ஸ்தாபன பூஜைக்குப் பிறகு அடிக்கல் நாட்டினார். அன்று காலை நடை பெற்ற அடிக்கல் நாட்டு விழாவிற்கு வருகை புரிந்திருந்தோரை வரவேற் றுப் பேசிய, தேவஸ்தான செயலாட் சித் தலைவர் திரு. பி. எஸ். ராஜ கோபாலராவ் அவர்கள் தம்முரை யில் மாணவர்களின் வேண்டுகோளுக் கிணங்கி இவ்விடுதி கட்டடம் கட்டப் பட உள்ளது என்றும், மேலும் விரை வில் அலிபிரி அருகில் சுமார் 50 ஏக்கர் நிலப்பரப்பில் பல கல்வி நிறு வனங்களுக்கான கட்டடங்கள் கட்டப் பட உள்ளன என்றும் அறிவித்தார். தொடர்ந்து பேசுகையில் அவர், தற் போதைய பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. சி. அண்ணாராவ் அவர் கள் தேவஸ்தானத்தின் செயலாட்சித் தலைவராகப் பதவியில் இருந்தபோது குறைந்த விலையில் தேவஸ்தானத்திற் கெனப் பல காலி மனைகளை வாங்கியது இன்று தேவஸ்தானம் பல்வேறு வளர்ச்சித் திட்டங்களை எளிதாக மேற் கொள்ளுதற்குரிய ஒரு சூழ்நிலையை உருவாக்கியது என்றும்குறிப்பிட்டார்.

திரு. சி. அண்ணாராவ் அவர்கள் விழாவிற்குத் தலைமைதாங்கி உரை யாற்றுகையில், தேவஸ்தானம் மேற் கொள்ளும் பல்வேறு நன் முயற்சி களுக்கு உதவிபுரிந்து ஊக்கமளித்து வரும் அரசின் இந்து சமய அறநிலைய ஆணையருக்குத் தன் நன்றியைத் தெரி வித்துக்கொண்டு மாணவ சமுதாயம் பயன்பெறும் வகையில் திருப்பதியில் பல கல்வி நிறுவனங்களை ஏற்படுத்தத் தான் மேற்கொண்ட முயற்சிகளை நினைவு கூர்ந்தார்.

விழாவின் சிறப்பு விருந்தினரான திரு. கே. புருஷோத்தமநாயுடு அவர் கள் பேசுகையில், ஒரு கல்லூரியின் விடுதி எவ்வகையில் மாணவ உள்ளங் களில் ஏற்றத்தாழ்வற்ற ஒரு பரந்த மனப்பான்மையைத் தோற்றுவிக் கின்றது. என்பதைக் குறிப்பிட்டு, பெருகிவரும் மாணவ சமுதாயத் தினரை மனதிற்கொண்டு, தேவஸ் தானம் ஆற்றிவரும் நன் முயற்சிகளைப் பெரிதும் பாராட்டிப் பேசினார். தொடர்ந்து பேசுகையில், கோயில் வருமானம் எவ்வகைகளில் செலவிடப் பட்டு வருகின்றது என்பதை விளக்கிக் கூறும்போது, தேவஸ்தானத்தின் நேரடிப் பொறுப்பில் வேதங்கள் தெலுங்கில் மொழி பெயர்க்கப்பட்டு

வருகின்றன என்றும், மேலே நாடுகளில் வாழ்ந்துவரும் இந்தியர்களுக்குப் பெரிதும் உதவும் வகையில், அங்கே பல இந்துக் கோயில்கள் கட்டப்பட்டும், மேலும் பல இடங்களில் கட்டுவதற்கான முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன என்றும் கூறினர்.

இறுதியில் கல்லூரி விடுதி காப்பாளர் திரு. எஸ். ஜி. எஸ். ஐவார்லு அவர்கள் நன்றி நவின்றார்.

## ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் 30வது நினைவு விழா

15ஆம் நூற்றாண்டைச் சார்ந்த தெலுங்குக் கவிஞரும், ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் பக்தருமான ஸ்ரீ தாள்ளபாக்க அன்னமாச்சார்யாவின் 30வது வருடாந்திர நினைவு விழா 4-4-78 அன்று திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. அன்று காலை தி. தி. தேவஸ்தான தலைமை அலுவலகத்திலிருந்து அன்னமாச்சார்யா கலா மந்திரத்திற்கு ஸ்ரீ வேங்கடேஸ்வரா மற்றும் அன்னமாச்சார்யாவின் திருவுருவப்படங்கள் திருவீதிவலமாக கொண்டுவரப்பட்டன. பின்னர், கலா மந்திரத்தில், ஸ்ரீ வேங்கடேஸ்வரா இசை நாட்டியக் கல்லூரியின் முதல்வர் திரு. டி. பசுபதி மற்றும் அக் கல்லூரியின் விரிவுரையாளர் திரு. எஸ். ஆர். ஜானகிராமன், அக்கல்லூரி மாணவர் திரு. ஜி. பாலகிருஷ்ண பிரஸாத் ஆகியோர் அன்னமாச்சார்யா கீர்த்தனைகளைப் பாடினர். அடுத்து, அக்கல்லூரி மாணவிகளின் கோஷ்டி கானம் நடைபெற்றதைத் தொடர்ந்து அன்றைய காலை நிகழ்ச்சிகள் இனிது முடிவடைந்தன.

அன்று மாலை 5-30 மணி அளவில் நடைபெற்ற பூஜை மற்றும் வேத பாராயணத்தைத் தொடர்ந்து, குமாரி ஷோபா ராணி தெலுங்கு வாழ்த்துப் பாடலைப் பாடினார்.

தேவஸ்தான இசை நாட்டியக் கல்லூரியின் முதல்வர் திரு. டி. பசுபதி அவர்கள் விழாவில் பங்கேற்று உரையாற்றுகையில் அன்னமாச்சார்யாவின் கவிதைகளின் பெருமைகளைப் பரப்ப தேவஸ்தானம் மேற்கொண்டு வரும் முயற்சிகளை விளக்கிக் கூறினர். அடுத்து திருமதி. டி. ஜெயா பசுபதி அவர்கள் ஆண்டறிக்கையை வாசித்ததைத் தொடர்ந்து, தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. எஸ். ராஜகோபால ராஜு அவர்கள் கூட்டத்தினரை வரவேற்று உரையாற்றுகையில், அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் பெருமைகளையும், சிறப்பினையும் பரப்பும் வகையில் தேவஸ்தானம் மேற்கொண்டுள்ள முயற்சிகளைக் குறிப்பிட்டு, அம்முயற்சிகளில் தேவஸ்தானம் வெற்றி பெற்றுவருவதையும் கூறினர். இம் முயற்சியில் ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகம் ஆற்றிவரும் உதவியினையும் குறிப்பிட்டார். பின்னர், அன்னமாச்சார்யாவின் கவிதைகளின் 24, 25 வது தொகுதிகளையும், அன்னாரின் தேர்ந்த கவிதைத் தொகுப்பு ஒன்றினையும், அன்னமய்யாவின் வரலாற்றுக் குறிப்பேடு ஒன்றினையும் செயலாட்சித் தலைவர் வெளியிட்டார்.

விழாவிற்குத் தலைமைவகித்து உரையாற்றிய ஆந்திர அரசவைக் கவிஞரும், பிரபலத் தெலுங்குத் திரைப்படக் கவிஞருமான டாக்டர். தாஸரதி அவர்கள் அன்னமய்யாவின் பாடல்களைக் குறிப்பிட்டு பேசுகையில், கிராமியச் சொற்களையும் நீதிக் கருத்துக்களையும் மிக எளிமையாக உவமை நயந்தோன்ற அன்னமய்யா தம் கவிதைகளில் தெரிவித்துள்ளார் என்று பல எடுத்துக்காட்டுகளின் மூலம் விளக்கிக் காட்டினர்.

பெங்களூர் ஆல் இண்டியா ரேடியோவின் முன்னாள் நிலைய இயக்குனரான திரு. ரஜனிகாந்தராவ் அவர்களும் இவ்விழாவில் பங்கேற்று, அன்னமய்யா பாடல்களில் உள்ள இசைத் தன்மையைப் பல பாடல்களைக் கொண்டு விளக்கினர். அடுத்துப் பேசிய ஸ்ரீவேங்கடேஸ்வரா கீழ்த்திசைக் கல்லூரியின் தெலுங்குத் துறைத் தலைவர் திரு. ஜி. ராமசுப்ப சர்மா அவர்கள் 'பக்தி' எனும் தலைப்பில், அன்னமய்யா பாடல்களில் விளங்கும் நாயகி–நாயக பாவத்தை விளக்கிப் பேசி, அதன் மூலம் பக்தியின் சிறப்பு எவ்வாறு அப்பாக்களில் சிறப்பிக்கப்பட்டுள்ளது என்பதைச் சில பாடல்களின் மூலம் எடுத்துக் காட்டினர். பின்னர் திருப்பதி ஸ்ரீ கோவிந்த ராஜசுவாமி கலைக்கல்லூரியின் தெலுங்கு விரிவுரையாளர் திரு. காமிசெட்டி ஸ்ரீநிவாசலு செட்டி அவர்கள் பேசுகையில், அன்னமய்யா பாடல்களில் பொதிந்துகிடக்கும் சமூக சீர்திருத்தக் கருத்துக்களை விளக்கிப் பேசினர்.

பின்னர் தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. சி. அண்ணாராவ் அவர்கள், அன்னமாச்சார்யா சந்ததியினர்க்குப் பொன்னாடைப் போர்த்தி கௌரவித்தார். பின்னர், இவ்விழா ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்டப் பல்வேறு இசைப் போட்டிகளில் வெற்றிபெற்ற மாணவ, மாணவிகளுக்கும், தேர்ந்தெடுக்கப்பட்ட ஆசிரியர்களுக்கும் திரு. சி. அண்ணாராவ் அவர்கள் பரிசுகள் வழங்கினர்.

திரு. எஸ். ஆர். ஜானகிராமன் அவர்கள் நன்றி நவின்றார்.

பிறகு, விஜயவாடா ஆல் இண்டியா ரேடியோவின் நிலைய மிருதங்க கலைஞரான திரு. தண்டமூரி ராம்கோபால் ராவ் அவர்களை தி. தி. தேவஸ்தான ஆஸ்தான மிருதங்க வித்வானாக நியமிக்கப்பட்டதை ஒட்டி, அன்னாருக்கு, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் அவர்கள் பொன்னாடைப் போர்த்தி, தேவஸ்தானத்தின் சார்பில் தங்கப் பதக்கம் அணிவித்து கௌரவித்தார்.

அன்று இரவு 8-30 மணி அளவில் டாக்டர். எம். பாலமுரளி கிருஷ்ணா அவர்களின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது.

5-4-78 முதல் 9-4-78 வரை திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் காலையிலும் மாலையிலும் நடைபெற்ற பல்வேறு இன்னிசைக்சச்சேரிகளில் தி. தி. தேவஸ்தான ஆஸ்தான வித்வான்கள் பங்கேற்றனர். ★

# ராசி பலன் (1-5-78 முதல் 31-5-78 வரை)

டாக்டர் பு. அக்கசோமயாஜி, M.A., Ph.D.
திருப்பதி.



## மேஷம்:

*[அசுவனி பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய]*

*ராகுவினுல் நன்மைகள், பணவரவு; குருவினுல் தீமைகள் ஏற்படல், அலுவலகக்கவலைகள், முயற்சிகளில் ஏமாற்றங்கள், சனியினுல் சச்சரவுகள், தன் பிள்ளைகள் பெண்கள் சம்பந்தப்பட்ட கவலைகளுக்குள்ளாதல், பண நஷ்டம்; செவ்வாயினுலும் உடல் நலம் கெடல், தீயோரால் துன்பங்கள் ஏற்படல்; புதனுல் சச்சரவுகள், பணநஷ்டம், உடல் நலம் கெடல்; சுக்ரனுல் நன்மைகள் ஏற்படல், மகிழ்ச்சி, மற்றைய கிரகங்களால் ஏற்படும் நஷ்டங்கள் யாவும் சமாளிக்கப்படல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல் நலம் கெடல், இறுதி 15 நாட்களின் போது பொருள் நஷ்டம்.*



## ரிஷபம்:

*[கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய]*

*ராகுவினுலும், சனியினுலும் தீமைகள் ஏற்படல், உற்ருர் உறவினர்களுடன் ஏற்படும் பிரிவினுல் கவலைகள்; குருவினுல் பணவரவு, எதிர்ப்புகளைச் சமாளித்தல்; செவ்வாயும் நலம் பயப்பதால் பொருள் வரவு, முக்கியமாக பிள்ளைகள் மூலமாக பணவரவு; புதனுல் மாதத்தின் முதல் 10 நாட்களின் போது பணவரவு, புதிய நண்பர்கள், மகிழ்ச்சி ஆனுல் இறுதி 20 நாட்களின் போது கருத்து வேறுபாடுகள், உடல் நலம் கெடல்; சுக்ரனுல் பணவரவு, குடும்பத்தில் மகிழ்ச்சி, தானிய வகைகள் கிடைக்கப் பெறல், மதிப்புயர்தல் புதிய ஆடை ஆபரணங்கள் வாங்குதல்; சூரியனுல் மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது உடல்நலம்கெடல்.*



## மிதுனம்:

*[மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய].*

*சனி நன்மை பயப்பதால்பணவரவு, புதிய வாகனம் வாங்குதல், உடல்நல மேன்மை; ராகுவினுலும் குருவினுலும் சச்சரவுகளுக்குள்ளாதல்; செவ்வாயினுல் தீமைகள் ஏற்படல், அலுவலகக் கவலை, பொருள் திருடப்படுவதன் மூலம் நஷ்டம் ஏற்படல்; புதனுல் நன்மைகள் ஏற்படல், வெற்றி, மகிழ்ச்சி, புதிய நட்புறவுகள்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பணவரவும், வெற்றியும்; சுக்ரனுல் மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது மகிழ்ச்சி.*



## கடகம்:

*[புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய]*

செவ்வாயினுலும், சனியினுலும் கெடுதிகள் ஏற்படுவதால் பணநஷ்டம், கவலைகள்; ராகுவினுல் நன்மை, பொருள் வரவு; குருவினுல் பிரயாணமும், உடல் நலம் கெடலும், சூரியன் நன்மை செய்வதால் வெற்றியும் பொருள் வரவும், சுக்ரனுல் கருத்து வேறுபாடுகள், மாதத்தின் முதல் 15 நாட்களின் போது இகழ்ச்சிக் குள்ளாதற்குரிய சூழ்நிலை ஆனுல் இறுதி 15 நாட்களுக்குப் பணவரவும், புதிய நண்பர்களும், புதனுல் வெற்றி, பொருள் லாபம், மகிழ்ச்சி.



## சிம்மம்:

*[மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய].*

*செவ்வாய், சனி குரு ஆகியவை தீமைகள் பயப்பதால் பண நஷ்டம், உடல் நலம் கெடல், மனைவிக்கு மனயமைதி கெடல், பிரயாணம், கடு முயற்சிக்குள்ளாதல்; குருவினுல் நன்மை, பதவி உயர்வு கிடைக்கப்பெறல், பண வரவு; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களுக்கு. பணநஷ்டம், உடல் நலம் கெடல், ஆனுல் அவற்றை சமாளிக்கும் வகையில் இறுதி 15 நாட்களின் போது உடல் நல மேன்மை, பணவரவு, வெற்றி, புதனுல் மாதத்தின் முதல் 10 நாட்களின் போது பொருள் வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், இறுதி 20 நாட்களுக்கு ஏமாற்றங்கள், தோல்விகள்; சுக்ரனுல் மாதத்தின்முதல் 15 நாட்களின்போது கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதலும் இகழ்ச்சிக்குள்ளாதலும், ஆனுல் இறுதி 15 நாட்களுக்குப் பண வரவும், புதிய நட்புறவுகளும்,*



## கன்னி:

*[உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய].*

சனியினுலும் ராகுவினுலும் நஷ்டம், மனமகிழ்ச்சியின்மை; செவ்வாயினுல் வெற்றி; குருவினுல் பண நஷ்டம்; சூரியனுல் உடல் நலம் கெடல்; சுக்ரனுல் பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், மகிழ்ச்சி, மாதத்தின் முதல் 15 நாட்களின் போது நன்மை பயக்கும் பணிகளை மேற்கொளல். ஆனுல் இறுதி 15 நாட்களின் போது கருத்து வேறுபாடுகள் ஏற்படல், இகழ்ச்சிக் குள்ளாதல்; சூரியனுல் உடல்நலம் கெடல், நஷ்டம்; புதனுல் மாதத்தின் முதல் 10 நாட்களின் போது வீண் விவாதங்களுக்குள்ளாதல். ஆனுல் இறுதி 20 நாட்களின்போது வெற்றி, புதியன வாங்குதல், பணவரவு.



## துலா:

*[சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய]*

சனி மற்றும் செவ்வாயினுல் பண வரவு, வெற்றி; ராகுவினுல் நஷ்டம்; குருவினுல் வெற்றி, பொருள் வரவு, புதிய தானிய வகைகள் கிடைக்கப் பெறல்; சூரியனுல் மாதத்தின் முதல் பகுதியில் பிரயாணமும் கடு முயற்சி களுக்குள்ளாதலும், இரண்டாம் பகுதி யின் போது உடல் நலம் கெடல்; சுக்ரனுல் பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள், மகிழ்ச்சி, மாதத்தின் முதல் 10 நாட்களின் போது வெற்றி, ஆனுல் மீதி நாட்களின்போது கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல்.



**விருச்சிகம் :**

*[விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய]*

ராகுவினுல் மகிழ்ச்சி, சனியினுல், நஷ்டம், தன்மதிப்பு கெடல்; குருவினுல் உடல் நலம் கெடல், பிரயாணம்; செவ்வாயினுல் பொருள் நஷ்டம் இகழ்ச்சிக்குள்ளாதல்; சூரியனுல் மாதத்தின் முதல் பகுதியின் போது உடல் நலம் மேன்மை, வெற்றி, ஆனுல் இரண்டாம் பகுதியில் பிரயாணமும், கடுமுயற்சியும் மேற்கொளல், சுக்ரனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பெண்களின் மூலம் மனயமைதி கெடல், இறுதி 15 நாட்களின் போது மகிழ்ச்சியும், புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப் பெறல்; புதனுல் மாதத்தின் முதல் 10 நாட்களின் போது குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள், ஆனுல் இறுதி நாட்களின் போது வெற்றியும், லாபமும்.



**தனுசு :**

*[மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய].*

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் உடல் நலம் கெடல், விவாதங்களுக்குள்ளாதல், தீயநடவடிக்கைக் குள்ளாதல்; செவ்வாயினுல் உடல்நலம் கெடல், நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல்; குருவினுல் மகிழ்ச்சி, கேளிக்கைகள்; சூரியனுல் உடல் நலம் கெடல், மாதத்தின் முதல் பகுதியில் எதிரிகளால் கெடுதி ஏற்படல் ஆனுல் இறுதி 15 நாட்களின் போது உடல் நலமேன்மையும், வெற்றியும்; சுக்ரனுல் உடல் நலம் கெடல், மாதத்தின் முதல் 15 நாட்களின் போது இகழ்ச்சிக்குள்ளாதற்குரிய சூழ்நிலை, இறுதி 15 நாட்களின் போது பெண்களின் மூலம் மனயமைதி கெடல்; புதனுல் மாதத்தின் முதல் 10 நாட்களின் போது குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள்.



**மகரம் :**

*[உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய].*

ராகுவினுல் தீய நடவடிக்கைகளுக்குள்ளாதல்; சனியினுல் உற்றார் உறவினருடன் பிரிவு; செவ்வாயினுல் மனைவியுடன் கருத்து வேறுபாடுகொளல், கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினுல் அவதியுறல்; குருவினுல் மனயமைதி பறிபோதல், சூரியனுல் உடல் நலம் கெடல், எதிரிகளால் கெடுதி ஏற்படல், சுக்ரனுல் புதிய நட்புறவுகள், மாதத்தின் முதல் 15 நாட்களின் போது மதிப்புயர்தல், புதியஉறவுகள் ஏற்படல். ஆனுல் இறுதி 15 நாட்களின் போது உடல் நலம் கெடல், இகழ்ச்சிக்குள்ளாதல்; புதனுல் குடும்பத்தில் மகிழ்ச்சி, புதிய நண்பர்கள், பண வரவு ஆனுல் குற்ற உணர்வுக் குள்ளாதல்.



**கும்பம் :**

*[அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய]*

ராகுவினுல் மனமகிழ்ச்சி கெடல், சனியினுல் பிரயாணம், செவ்வாயினுல் பணவரவு, வெற்றி, உடல்நல மேன்மை; குருவினுல் தன் பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் நன்மை அல்லது மக்கட்பேறு, நல்ல லாபம், புதிய வாகனம் மற்றும் ஆடை ஆபரணங்கள் வாங்கப்பெறல், சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பணவரவு பதிவு உயர்வு, ஆனுல் இறுதி 15 நாட்களின்போது உடல்நலம் கெடல்; சுக்ரனுல் நல்ல நண்பர்கள், மதிப்புயர்தல், புதிய உறவினர்கள்; புதனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது தன் மதிப்புக் கெடல், இறுதி 15 நாட்களின் போது பணவரவு, புதிய நண்பர்கள்.



**மீனம் :**

*[பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய].*

ராகுவினுல் விவாதங்களுக்குள்ளாதல்; சனியினுல் உடல் நல மேன்மை, வெற்றி; செவ்வாயினுல் உடல் நலம் கெடல், எதிரிகள் ஏற்படல் மற்றும் தன் பிள்ளைகள் அல்லது பெண்களால் கவலைகளுக்குள்ளாதல்; குருவினுல் உறவினர்கள் மூலம் இடையூறுகள் ஏற்படல், சூரியனுல் பணநஷ்டம், கண் சம்பந்தப்பட்ட நோய்களினுல் அவதியுறல், மாதத்தின் முதல் 15 நாட்களின் போது ஏமாற்றங்கள், இறுதி 15 நாட்களின் போது பணவரவு, வெற்றி, பதவி உயர்வு; சுக்ரனுல் மாத முழுவதும் நன்மைகள் உண்டாதல், மதிப்புயர்தல், புதிய நண்பர்கள், புதிய ஆடைஆபரணங்கள், பணவரவு; புதனுல் கருத்து வேறுபாடுகள், பண நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல்.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI. 517501

# ராசி பலன் (1-5-78 முதல் 31-5-78 வரை)

டாக்டர் ப. அரங்கசாமி, M.A., Ph.D.
திருப்பதி.



## மேஷம்:

*[அசுவனி பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய]*

ராகுவினால் நன்மைகள், பணவரவு; குருவினால் தீமைகள் ஏற்படல், அலுவலகக்கவலைகள், முயற்சிகளில் ஏமாற்றங்கள், சனியினால் சச்சரவுகள், தன் பிள்ளைகள் பெண்கள் சம்பந்தப்பட்ட கவலைகளுக்குள்ளாதல், பண நஷ்டம்; செவ்வாயினாலும் உடல் நலம் கெடல், தீயோரால் துன்பங்கள் ஏற்படல்; புதனால் சச்சரவுகள், பணநஷ்டம், உடல் நலம் கெடல்; சுக்ரனால் நன்மைகள் ஏற்படல், மகிழ்ச்சி, மற்றைய கிரகங்களால் ஏற்படும் நஷ்டங்கள் யாவும் சமாளிக்கப்படல்; சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல் நலம் கெடல், இறுதி 15 நாட்களின் போது பொருள் நஷ்டம்.



## ரிஷபம்:

*[கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய]*

ராகுவினாலும், சனியினாலும் தீமைகள் ஏற்படல், உற்றார் உறவினர்களுடன் ஏற்படும் பிரிவினால் கவலைகள்; குருவினால் பணவரவு, எதிர்ப்புகளைச் சமாளித்தல்; செவ்வாயும் நலம் பயப்பதால் பொருள் வரவு, முக்கியமாக பிள்ளைகள் மூலமாக பணவரவு; புதனால் மாதத்தின் முதல் 10 நாட்களின் போது பணவரவு, புதிய நண்பர்கள், மகிழ்ச்சி ஆனால் இறுதி 20 நாட்களின் போது கருத்து வேறுபாடுகள், உடல் நலம் கெடல்; சுக்ரனால் பணவரவு, குடும்பத்தில் மகிழ்ச்சி, தானிய வகைகள் கிடைக்கப் பெறல், மதிப்புயர்தல் புதிய ஆடை ஆபரணங்கள் வாங்குதல்; சூரியனால் மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது உடல்நலம்கெடல்.



## மிதுனம்:

*[மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய].*

சனி நன்மை பயப்பதால்பணவரவு, புதிய வாகனம் வாங்குதல், உடல்நல மேன்மை; ராகுவினாலும் குருவினாலும் சச்சரவுகளுக்குள்ளாதல்; செவ்வாயினால் தீமைகள் ஏற்படல், அலுவலகக் கவலை, பொருள் திருடப்படுவதன் மூலம் நஷ்டம் ஏற்படல்; புதனால் நன்மைகள் ஏற்படல், வெற்றி, மகிழ்ச்சி, புதிய நட்புறவுகள்; சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பணவரவும், வெற்றியும்; சுக்ரனால்மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது மகிழ்ச்சி.



## கடகம்:

*[புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய]*

செவ்வாயினாலும், சனியினாலும் கெடுதிகள் ஏற்படுவதால் பணநஷ்டம், கவலைகள்; ராகுவினால் நன்மை, பொருள் வரவு; குருவினால் பிரயாணமும், உடல் நலம் கெடலும், சூரியன் நன்மை செய்வதால் வெற்றியும் பொருள் வரவும், சுக்ரனால் கருத்து வேறுபாடுகள், மாதத்தின் முதல் 15 நாட்களின் போது இகழ்ச்சிக் குள்ளாதற்குரிய சூழ்நிலை ஆனால் இறுதி 15 நாட்களுக்குப் பணவரவும், புதிய நண்பர்களும், புதனால் வெற்றி, பொருள் லாபம், மகிழ்ச்சி.



## சிம்மம்:

*[மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய].*

செவ்வாய், சனி குரு ஆகியவை தீமைகள் பயப்பதால் பண நஷ்டம், உடல் நலம் கெடல், மனைவிக்கு மன அமைதி கெடல், பிரயாணம், கடு முயற்சிக்குள்ளாதல்; குருவினால் நன்மை, பதவி உயர்வு கிடைக்கப்பெறல், பண வரவு; சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களுக்கு. பணநஷ்டம், உடல் நலம் கெடல், ஆனால் அவற்றை சமாளிக்கும் வகையில் இறுதி 15 நாட்களின் போது உடல் நல மேன்மை, பணவரவு, வெற்றி, புதனால் மாதத்தின் முதல் 10 நாட்களின் போது பொருள் வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், இறுதி 20 நாட்களுக்கு ஏமாற்றங்கள், தோல்விகள்; சுக்ரனால் மாதத்தின்முதல் 15 நாட்களின்போது கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதலும் இகழ்ச்சிக்குள்ளாதலும், ஆனால் இறுதி 15 நாட்களுக்குப் பண வரவும், புதிய நட்புறவுகளும்,



## கன்னி:

*[உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய].*

சனியினாலும் ராகுவினாலும் நஷ்டம், மனமகிழ்ச்சியின்மை; செவ்வாயினால் வெற்றி; குருவினால் பண நஷ்டம்; சூரியனால் உடல் நலம் கெடல்; சுக்ரனால் பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், மகிழ்ச்சி, மாதத்தின் முதல் 15 நாட்களின் போது நன்மை பயக்கும் பணிகளை மேற்கொளல். ஆனால் இறுதி 15 நாட்களின் போது கருத்து வேறுபாடுகள் ஏற்படல், இகழ்ச்சிக் குள்ளாதல்; சூரியனால் உடல்நலம் கெடல், நஷ்டம்; புதனால் மாதத்தின் முதல் 10 நாட்களின் போது வீண் விவாதங்களுக்குள்ளாதல். ஆனால் இறுதி 20 நாட்களின்போது வெற்றி, புதியன வாங்குதல், பணவரவு.



## துலா:

*[சித்துரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய]*

சனி மற்றும் செவ்வாயினால் பண வரவு, வெற்றி; ராகுவினால் நஷ்டம்; குருவினால் வெற்றி, பொருள் வரவு, புதிய தானிய வகைகள் கிடைக்கப் பெறல்; சூரியனால் மாதத்தின் முதல் பகுதியில் பிரயாணமும் கடு முயற்சி களுக்குள்ளாதலும், இரண்டாம் பகுதி யின் போது உடல் நலம் கெடல்; சுக்ரனால் பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள், மகிழ்ச்சி, மாதத்தின் முதல் 10 நாட்களின் போது வெற்றி, ஆனால் மீதி நாட்களின்போது கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல்.



விருச்சிகம் :

[விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய]

ராகுவினால் மகிழ்ச்சி, சனியினால், நஷ்டம், தன்மதிப்பு கெடல்; குருவினால் உடல் நலம் கெடல், பிரயாணம்; செவ்வாயினால் பொருள் நஷ்டம் இகழ்ச்சிக்குள்ளாதல்; சூரியனால் மாதத்தின் முதல் பகுதியின் போது உடல் நலம் மேன்மை, வெற்றி, ஆனால் இரண்டாம் பகுதியில் பிரயாணமும், கடுமுயற்சியும் மேற்கொளல், சுக்ரனால் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பெண்களின் மூலம் மனயமைதி கெடல், இறுதி 15 நாட்களின் போது மகிழ்ச்சியும், புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப் பெறல்; புதனால் மாதத்தின் முதல் 10 நாட்களின் போது குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள், ஆனால் இறுதி நாட்களின் போது வெற்றியும், லாபமும்.



தனுசு :

[மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய].

ராகுவினால் கருத்து வேறுபாடுகள்; சனியினால் உடல் நலம் கெடல், விவாதங்களுக்குள்ளாதல், தீய நடவடிக்கைக் குள்ளாகல்; செவ்வாயினால் உடல்நலம் கெடல், நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல்; குருவினால் மகிழ்ச்சி, கேளிக்கைகள்; சூரியனால் உடல் நலம் கெடல், மாதத்தின் முதல் பகுதியில் எதிரிகளால் கெடுதி ஏற்படல் ஆனால் இறுதி 15 நாட்களின் போது உடல் நலமேன்மையும், வெற்றியும்; சுக்ரனால் உடல் நலம் கெடல், மாதத்தின் முதல் 15 நாட்களின் போது இகழ்ச்சிக்குள்ளாதற்குரிய சூழ்நிலை, இறுதி 15 நாட்களின் போது பெண்களின் மூலம் மனயமைதி கெடல்; புதனால் மாதத்தின் முதல் 10 நாட்களின் போது குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள்.



மகரம் :

[உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம பாதம் முடிய].

ராகுவினால் தீய நடவடிக்கைகளுக்குள்ளாதல்; சனியினால் உற்றார் உறவினருடன் பிரிவு; செவ்வாயினால் மனைவியுடன் கருத்து வேறுபாடுகொளல், கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதியுறல்; குருவினால் மனயமைதி பறிபோதல், சூரியனால் உடல் நலம் கெடல், எதிரிகளால் கெடுதி ஏற்படல், சுக்ரனால் புதிய நட்புறவுகள், மாதத்தின் முதல் 15 நாட்களின் போது மதிப்புயர்தல், புதியஉறவுகள் ஏற்படல். ஆனால் இறுதி 15 நாட்களின் போது உடல் நலம் கெடல், இகழ்ச்சிக்குள்ளாதல்; புதனால் குடும்பத்தில் மகிழ்ச்சி, புதிய நண்பர்கள், பண வரவு ஆனால் குற்ற உணர்வுக்குள்ளாதல்.



கும்பம் :

[அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய]

ராகுவினால் மனமகிழ்ச்சி கெடல், சனியினால் பிரயாணம், செவ்வாயினால் பணவரவு, வெற்றி, உடல்நல மேன்மை; குருவினால் தன் பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் நன்மை அல்லது மக்கட்பேறு, நல்ல லாபம், புதிய வாகனம் மற்றும் ஆடை ஆபரணங்கள் வாங்கப்பெறல், சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பண வரவு பதிவு உயர்வு, ஆனால் இறுதி 15 நாட்களின்போது உடல்நலம் கெடல்; சுக்ரனால் நல்ல நண்பர்கள், மதிப்புயர்தல், புதிய உறவினர்கள்; புதனால் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது தன் மதிப்புக் கெடல், இறுதி 15 நாட்களின் போது பணவரவு, புதிய நண்பர்கள்.



மீனம் :

[பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய].

ராகுவினால் விவாதங்களுக்குள்ளாதல்; சனியினால் உடல் நல மேன்மை, வெற்றி; செவ்வாயினால் உடல் நலம் கெடல், எதிரிகள் ஏற்படல் மற்றும் தன் பிள்ளைகள் அல்லது பெண்களால் கவலைகளுக்குள்ளாதல்; குருவினால் உறவினர்கள் மூலம் இடையூறுகள் ஏற்படல், சூரியனால் பணநஷ்டம், கண் சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதியுறல், மாதத்தின் முதல் 15 நாட்களின் போது ஏமாற்றங்கள், இறுதி 15 நாட்களின் போது பணவரவு, வெற்றி, பதவி உயர்வு; சுக்ரனால் மாத முழுவதும் நன்மைகள் உண்டாதல், மதிப்புயர்தல், புதிய நண்பர்கள், புதிய ஆடைஆபரணங்கள், பணவரவு; புதனால் கருத்து வேறுபாடுகள், பண நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல்.

★

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI. 517501

Regd. No. H/TRP/12 தனிப்பிரதி 50 காசு



# ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில், பிரம்மோற்சவம்
## திருப்பதி

**உற்சவ விவரங்கள்**

| தேதி | கிழமை | பகல் உற்சவங்கள் | இரவு உற்சவங்கள் |
|---|---|---|---|
| 14-5-78 | ஞாயிறு | —— | சேனாதிபதி உற்சவம் அங்குரார்ப்பணம் |
| 15-5-78 | திங்கள் | திருச்சி உற்சவம் துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாஹனம் |
| 16-5-78 | செவ்வாய் | சிறிய சேஷ வாஹனம் | ஹம்ஸ வாஹனம் |
| 17-5-78 | புதன் | ஸிம்ஹ வாஹனம் | முத்துப்பந்தல் வாஹனம் |
| 18-5-78 | வியாழன் | கல்பவிருக்ஷ வாஹனம் | சர்வபூபால வாஹனம் |
| 19-5-78 | வெள்ளி | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருட வாஹனம் |
| 20-5-78 | சனி | ஹனுமந்த வாஹனம் (மாலை-வசந்தோற்சவம்) | கஜ வாஹனம் |
| 21-5-78 | ஞாயிறு | ஸூர்யப்பிரபை வாஹனம் | சந்திரப்பிரபை வாஹனம் |
| 22-5-78 | திங்கள் | ரதோற்சவம் | குதிரை வாஹனம் |
| 23-5-78 | செவ்வாய் | பல்லக்கு உற்சவம், அவப்பிரதோற்சவம் [சக்ரஸ்நானம்] | திருச்சியில் துவஜாவரோஹணம் |

இவ்விழா நாட்களின்போது மாலை நேரங்களில் ஊஞ்சல் சேவை நடைபெறும்.

நாராயணவனத்திற்கு . . . . . . வருகை புரியுங்கள் !



## ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில் பிரம்மோற்சவம்

உற்சவ விவரங்கள்

| தேதி | கிழமை | பகல் உற்சவங்கள் | இரவு உற்சவங்கள் |
|---|---|---|---|
| 18—5—78 | வியாழன் | — | சேனாபதி உற்சவம் அங்குரார்ப்பணம் |
| 19—5—78 | வெள்ளி | திருச்சி உற்சவம், துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாகனம் |
| 20—5—78 | சனி | சிறிய சேஷ வாஹனம் | ஹம்ஸ வாஹனம் |
| 21—5—78 | ஞாயிறு | ஸிம்ஹ வாஹனம் | முத்துப்பந்தல் வாஹனம் |
| 22—5—78 | திங்கள் | கல்பவிருக்ஷ வாஹனம் | சர்வபூபால வாஹனம் |
| 23—5—78 | செவ்வாய் | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருட வாஹனம் |
| 24—5—78 | புதன் | ஹனுமந்த வாஹனம் [மாலை-வசந்தோற்சவம்] | கஜ வாஹனம் |
| 25—5—78 | வியாழன் | ஸூர்யப்பிரபை வாஹனம் | சந்திரப் பிரபை வாஹனம் |
| 26—5—78 | வெள்ளி | ரதோற்சவம் | குதிரை வாஹனம், கல்யாணோற்சவம் |
| 27—5—78 | சனி | பல்லக்கு உற்சவம், அவப்பிரதோற்சவம் [சக்ரஸ்நாநம்] | திருச்சி, துவஜாவரோஹணம் |

*(தி. தி. தேவஸ்தானத்தைச் சார்ந்த இக்கோயில், சென்னை – திருப்பதி மார்க்கத்தில், திருப்பதியிலிருந்து 45 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.)*